


உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சேஷாத்திரிசிவனாருளிச்செய்த

# நாநாசீவவாதக் கட்டளை.

இஃது

ஸ்ரீகோயிலூர்

பொன்னம்பலசுவாமிகள்

முன்னிலையிற்

பரிசோதிக்கப்பட்ட பிரதிக்கிணங்க,





கொ. லோகநாதமுதலியாரவர்களால்

தமது

மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1915.

இதன்விலை அணா—க.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# நானாசிவவாதக்கட்டளை.

## காப்பு.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொ னம்பலவன்
ஞானகுரு வாணியையு ணாடு.

சுத்தப்பிரமமா யிருக்கின்ற சர்வ சாக்ஷியினிடத்திலே அக்கினியிற் சூடுபோலஅபின்னமாகவொருசத்தி உண்டு; அந்தச் சத்தி அவ்வதீதப் பிரமத்தில் அடங்கியிருக்கும்போது அதற்குச் சுத்தப்பிரமமென்று பெயர். இந்தச்சத்தி விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும்போது அப்பிரமம் பரைவியாபகத்துக்குள்ளிருந்தபடியினாலே அதற்குப்பரப்பிரமமென்று பெயராம்.

இலக்ஷண சூன்யமாயிருக்கின்ற இந்தச் சத்திக்குப் பிரமத்தினுடைய சந்நிதானத்தில்,புருடசமுகத்திலேஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற்போல அவிகிர்த சத்துவ ரஜஸ்தமோ குணங்கள் உண்டாயின. இவற்றில் சுத்தசத்துவத்திற்குஆநந்தரூபசத்தியென்றுபெயர். சுத்தரஜஸிற்குச் சித்ரூபசத்தியென்று பெயர். சுத்த தமஸிற்குச் சத்ரூபசத்தியென்றுபெயர். இவற்றில்காரணமான ஆனந்தரூபசத்தியுடனேபரப்பிரமங்கூடிச்சர்வாநந்தமென்னுஞ்சுழுத்தியவஸ்தையையடைகின்றபோதுபரப்பிரமமென்கின்றபெயர்போய்ப்பரமாநந்த

ரென்கிற பெயர்வந்தது. இந்தப் பரமாநந்தர் சித்ரூபசத்தியுடனேகூடிச்சர்வப்பிரகாசமென்னுஞ் சொப் பனவஸ்தையையடைகின்றபோது பரமாநந்தரென்னும் பெயர்போய்த் தேசோமயரென்னும் பெயர்வந்தது. இந்தத் தேசோமயர் சத்ரூபசத்தியுடனேகூடிச் சர்வவியாபகமென்னுஞ் சாக்கிராவஸ்தையை யடைகின்றபோது தேசோமயரென்னும் பெயர்போய்ப் பரிபூரணரென்னும் பெயர்வந்தது.

இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப்பிரமத்தினிடத்திலே * சுத்தியில் ரஜிதம்போல மூலப்பிரகிருதியென்னும் ஒருசத்திஉண்டு. அந்த மூலப்பிரகிருதியும் விகிர்தகுணமாகிய முக்குணத்தோடு கூடியிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவகுணத்தை மாயையென்றும், சர்வக்ஞவுபாதியென்றும், ஈசுரகாரணசரீரமென்றுஞ்சொல்லப்படும். இந்தமாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதிவிம்பம்போலப்பிரமசுலட்சணமாகப் பிரதிவிம்பிக்கும். இந்தப் பிரதிவிம்ப சைதன்னியத்தைச்சர்வக்ஞனுகியஈசுரனென்றுசொல்லப்படும்.

இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸு, சத்துவத்தில் தமஸுஎன மூன்று குணங்கள் உண்டு. இவைகளில் சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை இரக்ஷிக்கையினுல் விஷ்ணுவென்றும், சத்துவத்தில் ரஜஸு பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருட்டிக்கையினுல் பிரமாவென்றும், சத்துவத்தில் தமஸு பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை உபசம்மாரம்பண்ணுகையினுல் உருத்திரனென்றுஞ் சொல்லப்படுவன். இப்படி மூலப்பிரகிருதியின்சத்துவகுண கற்பனை சொல்லப்பட்டது.

* புருடனிடத்துச் சாமர்த்திய ரூபசத்திபோலப் பிரமத்தின் கண் அனுதிசித்தமாயிருக்கிற மூலப்பிரகிருதியென்னுஞ் சத்திக்குச் சுத்தி ரஜிதத்தை உபமானமாகச்சொன்னது அநிர்வசனியத் தன்மையென்னும் பொருள்தோன்ற என்க.



இனி மூலப்பிரகிருதியின் இரஜோகுணம் அநேகரூபமாய்ப்பிரிந்து அவித்தைகளென்றும், ஜீவகாரண சரீரங்களென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மியமாகச் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலினசலப் பிரதிவிம்பம்போலப் பிரமசைதன்னியம் பிரதிவிம்பிக்கும். இந்தப் பிரதிவிம்ப சைதன்னியங்களை கிஞ்சிக்ஞரென்றும், சீவசிதாபாசரென்றும், பிராக்ஞரென்றுஞ்சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் ரஜஸில் சத்துவம், ரஜசில்ரஜசு, ரஜசில்தமசு என மூன்றுகுணங்கள் உண்டு. இரஜஸில் சத்துவம் பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் தத்துவக்ஞான நிஷ்டனுவன். இரஜஸில் ரஜசு பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் காமக்குரோதபரனுய்க் கர்மநிஷ்டனுவன். இரஜஸில் தமசுபிரதானமாகும்போது அதில்பிரதிவிம்பித்தசிதாபாசன் சோம்பல், நித்திரை, மயக்கம்ஆகிய இவைகளையடைவன்; இப்படி மூலப்பிரகிருதியின்இரஜோகுணகற்பனைசொல்லப்பட்டது.

இனி மூலப்பிரகிருதியின் தமோகுணத்திற்கு ஆவரணம், விக்ஷேபம்என்ன இரண்டு சத்திகள் உண்டு. இவ்விரண்டில் ஆவரணசத்தியானது தத்துவஞானியையும், ஈசுரனையுந் தவிர மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷிசைதன்னியம் என்னு மிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள பேதந் தெரியவொட்டாமல் மறைக்கும். இதனால் மறைக்கப்பட்ட சீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென் றபிமானிப்பர். இந்த அபிமானத்தை அகங்காரக் கிரந்தியென்றும், சம்சாரபந்தமென்றுஞ் சொல்லப்படும். சற்குருகடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரணசத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

இனி விக்ஷேபசத்தியினின்றும் சத்த தன்மாத்திரையான ஆகாசந் தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிச தன்மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூப தன்மாத்திரையான அக்கினிதோன்றிற்று. அக்கினியினின்றும் ரஸதன்மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் கந்த தன்மாத்திரையான பிருதுவிதோன்றிற்று. இந்தச் சூக்ஷ்ம பஞ்சபூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விக்ஷேப சத்தியினிடத்திலே தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸ், தமஸில் தமஸ் என்னுமிவை அற்பங் கருவாகவிருந்தபடியால் அதன்காரியமாகிய இந்தத் தன்மாத்திரைகளான பஞ்சபூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன.



இந்தப் பஞ்சபூதங்கட்குத் தன்மாத்திரைகளென்றும், அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷ்ம பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும் சாஸ்திரங்களில் நாமஞ்சொல்லப்படும்.

இந்தச் சூக்ஷ்ம பூதங்களினின்றும் சூக்ஷ்ம சரீரங்களும், ஸ்தூலபூதங்களுந்தோன்றும்; அஃதெங்ஙனமெனின்,-

ஆகாசமுதலான பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொருமாத்திரையெடுத்து ஒன்றாகக்கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தின் அம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச்சகலமான கேள்விக்கும் இடங்கொடுத்துத்தரிக்கின்றது. இப்படித்தரிக்கின்ற¶ விருத்திக்கு †உள்ளமென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் வாயுவினம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனமென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் அக்கினியினம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதின்னதென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தியென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அப்புவினம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போலவிடயங்களிற் பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச்

¶ விருத்தி-பரிணாமம். † உள்ளம்-தேஜஸ் என்னும் பாடமுளது.

சித்தமென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் பிருதுவியி
னம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் பி
ருதுவியைப்போலக் கடினமாகநின்று நானென்றபிமானிக்
கின்றது; இந்த அபிமான விருத்திக்கு அகங்காரமென்று
பெயர்.

இன்னம் ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடையசத்
துவாம்சத்திலே பூதத்திற்கொவ்வொரு மாத்திரை யெடுத்
துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரி
யமென்று சொல்லப்படும். இவைகளில் சுரோத்திரம் ஆகா
சத்தி னம்சமான்படியால் ஆகாசத்தின் குணமான சத்த
மாத்திரத்தை அறியும். துவக்கு வாயுவினம்சமானபடியால்
வாயுவின் குணமான பரிசமாத்திரத்தை அறியும். சக்ஷு
அக்கினியி னம்சமானபடியால் அக்கினியின்குணமானரூப
மாத்திரத்தை அறியும். சிங்ஙுவை அப்புவி னம்சமான படி
யால்அப்புவின்குணமான ரசமாத்திரத்தை அறியும். ஆக்கி
ராணம் பிருதுவியி னம்சமானபடியால் பிருதுவியின் குண
மான கந்தமாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோ
டொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்
தைக் கிரகிக்க வறியாது. அந்தக்கரணத்தில் ஐந்துமாத்தி
ரையும் ஒன்றாய்க் கூடினதுகொண்டு ஐந்திந்திரியங்களினு
லும் ஐந்துவிடயங்களையும் அறியும். இந்தச் சத்துவகுணத்
தினுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்
தும் ஆகப்பத்தும் சத்துவாம்சமானபடியால் ஞானசாதன
மாயின.



இன்னம் ஐந்து பூதங்களினுடைய இராஜோம்சத்திலே
பூதத்திற்கு ஒவ்வொருமாத்திரை யெடுத்து ஒன்றாகக்கூட்டி
வைத்தது வியானாதி பஞ்சவாயுக்கள். இவைகளில் வியான்
வாயு ஆகாசத்தி னம்சமானபடியால் ஆகாசத்தைப்போலச்
சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயுவாயுவி னம்
சமானபடியால் வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசி
யாதிபரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியி னம்சமா
ன்படியால் அக்கினியைப்போலச் சாடராக்கினியாக உஷ்
ணித்துக்கொண்டு குதத்தைப் பற்றிநின்று உண்டவன்ன
பானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவ்வாயு அப்புவினம்ச
மானபடியால் சரீரநடுவான நாபித்தானத்தினின்று உண்ட
வன்னரஸங்களை அப்புவைப்போல இழுக்கும். உதானவா
யு பிருதுவியி னம்சமானபடியால் கண்டத்தைப்பற்றிப்பி
ருதுவியைப்போலக் கடினமாகநின்று உண்ட வன்னபானா
திகளைக்கடையும். இந்தப் பஞ்சவாயுக் களையு மல்லாமல்
வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்துவி
ழிப் பிக்கின்றது கூர்மனென்றும், குறுகுறுத்துத் தும்மச்
செய்கின்றது கிரிகரனென்றும்,கொட்டாவி கொள்ளச்செய்
கின்றது தேவதத்தனென்றும், வீங்கச்செய்கின்றது தனஞ்
சயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர்
சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலான
படியால் வேறல்ல. இன்னம் ஆகாசமுதலிய பஞ்சபூதங்களி
னுடைய இராஜோம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்தி
ரையெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்
திரியமென்று சொல்லப்படும்.

சித்தமென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் பிருதுவியி னம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் பிருதுவியைப்போலக் கடினமாகநின்று நானென்றபிமானிக்கின்றது; இந்த அபிமான விருத்திக்கு அகங்காரமென்று பெயர்.

இன்னம் ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடையசத்துவாம்சத்திலே பூதத்திற்கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும். இவைகளில் சுரோத்திரம் ஆகாசத்தி னம்சமான்படியால் ஆகாசத்தின் குணமான சத்தமாத்திரத்தை அறியும். துவக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின் குணமான பரிசமாத்திரத்தை அறியும். சக்ஷு அக்கினியி னம்சமானபடியால் அக்கினியின்குணமானரூபமாத்திரத்தை அறியும். சிங்ஙுவை அப்புவி னம்சமான படியால்அப்புவின்குணமான ரசமாத்திரத்தைஅறியும். ஆக்கிராணம் பிருதுவியி னம்சமானபடியால் பிருதுவியின் குணமான கந்தமாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க வறியாது. அந்தக்கரணத்தில் ஐந்துமாத்திரையும் ஒன்றாய்க் கூடினதுகொண்டு ஐந்திந்திரியங்களினாலும் ஐந்துவிடயங்களையும் அறியும். இந்தச் சத்துவகுணத்திலுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப்பத்தும் சத்துவாம்ச மானபடியால் ஞானசாதனமாயின.



இன்னம் ஐந்து பூதங்களினுடைய இரஜோம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொருமாத்திரை யெடுத்து ஒன்றாகக்கூட்டி வைத்தது வியானாதி பஞ்சவாயுக்கள். இவைகளில் வியான்வாயு ஆகாசத்தி னம்சமானபடியால் ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயுவாயுவி னம்சமானபடியால் வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசியாதிபரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியி னம்சமான்படியால் அக்கினியைப்போலச் சாடராக்கினியாக உஷ்ணித்துக்கொண்டு குதத்தைப் பற்றிநின்று உண்டவன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவினம்சமானபடியால் சரீரநடுவான நாபித்தானத்தினின்று உண்ட வன்னரஸங்களை அப்புவைப்போல இழுக்கும். உதானவாயு பிருதுவியி னம்சமானபடியால் க்ண்டத்தைப்பற்றிப் பிருதுவியைப்போலக் கடினமாகநின்று உண்ட வன்னபானாதிகளைக்கடையும். இந்தப் பஞ்சவாயுக் களையு மல்லாமல் வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்துவிழிப் பிக்கின்றது கூர்மனென்றும், குறுகுறுத்துத் தும்மச்செய்கின்றது கிரிகரனென்றும்,கொட்டாவி கொள்ளச்செய்கின்றது தேவதத்தனென்றும், வீங்கச்செய்கின்றது தனஞ்சயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் வேறல்ல. இன்னம் ஆகாசமுதலிய பஞ்சபூதங்களினுடைய இரஜோம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியமென்று சொல்லப்படும்.

இவைகளில் ஆகாசத்தினிடமாக வாக்கு வசனிக்கும். வாயுவினிடமாகப் பாணி இடுதல்,ஏற்றல்செய்யும். அக்கினியினிடமாகப்பாதம்நடக்கும். அப்புவினிடமாகப்பாயுரு மலசலாதிகளை வெளியிலேதள்ளும். பிருதுவியினிடமாக உபஸ்தம் சுகத்தைப்பண்ணும்.இந்த ஐந்துந் தனித்தனியேஇருந்ததுகொண்டு மறுதொழில் செய்யமாட்டாது. வியானாதி வாயுக்கள் ஐந்துமாத்திரையும் ஒன்றாய்க்கூடினதுகொண்டு கர்மேந்திரியம் ஐந்தின்வழியினாலும் ஐந்துதொழில்களையுஞ் செய்து முடிக்கும். இந்த வாயுக்களைந்தும், கர்மேந்திரியங்களைந்தும் ஆகப்பத்தும் இரஜோம்ச மான்படியினால் கிரியா சாதனமாயின. அந்தக்கரணம்-௫, ஞானேந்திரியம் - ௫, வாயுக்கள்-௫, கர்மேந்திரியம்-௫ ஆக இருபது தத்துவமுஞ் சூக்ஷும சரீரமென்று சொல்லப்படும். இந்தச் சூக்ஷும சரீரத்தை மாயாப் பிரதி விம்பனாகவிருக்கின்ற ஈசுரன் அவித்தையாப் பிரதிவிம்பராகிய சீவர்கள் அனேகராகையால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொருசரீரமாகச் சிருஷ்டித் தளித்தான். அப்போது பஞ்சபூதத்தினுடைய சாத்வீகாம்சமும் இரஜசாம்சமும் செலவழிந்தன. தாமத குணமாத்திரஞ் சேடித்தது. சூட்சுமசரீரம் வாங்காத சீவர்களுக்கெல்லாம் இன்னுமொரு சிருட்டிக்கு ஆகட்டுமென்று நிறுத்தினார். இப்படிச் சூக்ஷும சரீரகற்பனை சொல்லப்பட்டது.

இனித் தூலபூத வுற்பத்தி சொல்லுகின்றோம். அஃதெங்ஙனமெனின்:—தமோம்சமா யிருக்கின்ற ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதிஐந்தையும் ஒவ்வொன்றை நான்குநான்காகப்பகுத்து



இரண்டாம்பாதி ஐந்தில் தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது * பஞ்சீ கரண மென்று சொல்லப்படும்.

இப்படி பஞ்சீகரணம் பண்ணின தூலபூதங்களிலே ஆகாசத்திலே பரிச ரூப ரஸ கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப்போக நிசகுணமாகிய சத்தந்திருசியமாம். வாயுவிலே ரூப ரஸ கந்தம் ஆகிய மூன்றுகுணங்களும் வியாப்பியமான்படியினால் அதிருசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சத்தமும்; நிசகுணமாகிய பரிசமுந் திருசியமாம். அக்கினியிலே ரஸ கந்த மாகிய இரண்டு குணங்களும் வியாப்பியமான்படியினால் அதிருசியமாய்ப்போகக் காரணகுணங்களாகிய சத்தபரிசமும், நிசகுணமாகியரூபமுந்திருசியமாம். அப்புவிலேகந்தகுணம் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்போகக் காரணகுணங்களாகிய சத்த பரிச ரூபமும், நிசகுணமாகிய ரசமுந் திருசியமாம். பிருதுவியிலே காரணகுணங்களாகிய சத்த பரிச ரூப ரசமும், நிசகுணமாகிய கந்தமுந் திருசியமாம்.

முன் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்கள் தோன்றினாற்போலப்பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூலபூதங்களினின்றும் ஆறுதத்துவமாய்,நால்வகைப் பிறப்பாய், மூவகைச்சாதியா யிருக்கின்ற ஸ்தூலசரீரங்கள் தோன்றின;

* பஞ்சீகரணம்—ஒவ்வொருபூதத்தில் ஐந்து ஐந்து பூதங்களைச் சேர்த்துப் பண்ணுவது.

இவற்றுள் ஆறுதத்துவங்களாவன்:—சர்மம், உதிரம், மாமிசம், சனாயு, அத்தி, மச்சை இவைகளாம்.

நால்வகைத் தோற்றங்களாவன:—சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் இவைகளாம்.

மூவகைச் சாதிகளாவன:—இகலோக, பரலோக புத்தி இருவகையுங் கொடுக்கின்ற மானுடசரீரம் உத்தமசாதி. பரலோக புத்தியைமறைத்து இகலோக புத்திமாத்திரங் கொடுக்கின்ற பசு பக்ஷிமுதலானவை மத்தியசாதி. இரண்டு லோகப்புத்தியையும்மறைத்திருக்கின்ற மரம், கொடி, செடி முதலியவை அதமசாதி, இப்படிப்பிருதுவி தத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் என்னப்பட்ட தத்துவங்களாய் நிரைநிரையே யிருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யட்ச, கந்தர்வ, சித்தர் லோகங்களினும் நட்சத்திரமாகத் தோற்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன்முதலான தேவதைகள், கந்தருவர், சித்தர் என்னப்பட்டவர்கள் உத்தமசாதி. காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன்முதலானவை மத்திமசாதி. கற்பகவிருட்சம், பாரிசாதம்முதலானவை அதமசாதி. இந்தத் தூலசரீரமே அன்னமயகோசம். சூட்சுமசரீரம் மூன்று கோசங்களா யிருக்கும்.

அஃதெங்ஙனமெனின்:—பிராணவாயுவும், கர்மேந்திரியங்களுங்கூடிப் பிராணமயகோசம். மனதும், ஞானேந்திரியங்களுங்கூடி மனோமயகோசம். புத்தியும், ஞானேந்திரியங்



களுங்கூடி விஞ்ஞானமயகோசம். காரணசரீரமே ஆநந்தமயகோசம். இப்படிப் பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.

ஆறுதத்துவங்களா யிருக்கின்ற ஸ்தூலசரீரத்திலே இருபது தத்துவங்களா யிருக்கின்ற சூட்சுமசரீர மிருக்கின்றது.

அஃதெப்படியெனின்:—கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும் வாயிலிருக்கும். உதானவாயுவும், மனதும் கண்டத்திலேயிருக்கும். பிராணவாயுவும், புத்தியும் இருதயத்திலேயிருக்கும். சமானவாயுவும், சித்தமும் நாபியிலிருக்கும். அபானவாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும். வியானவாயுவும், ஞானேந்திரியங்களுள் துவக்கும், அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே உள்ளமும், கருவிழிநுனியிலே சக்ஷிந்திரியமும், காதிற்குள்ளேசுரோத்ரேந்திரியமும், மூக்குநுனியிலே கிராணேந்திரியமும், கழுத்திற்குமேலே தனித்தனியேயிருக்கும். கழுத்திற்குக் கீழே கை, கால், குய்யங்களில் பாணி, பாதம், உபஸ்தம் மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படித் தூலசரீர தத்துவங்கள் ஆறு. அதிற் குடிபுகுந்த சூட்சுமசரீரதத்துவங்கள் இருபது. ஆகத்தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்சபூதங்களின் காரிய மானபடியினாலே ஒருமைப்பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

அவித்தையிற் பிரதிவிம்பித்த காரணசரீரமும் சிதாபாசனும் சாக்கிரத்திலே இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்து நின்றபோது விசுவனென்றும், வியவகாரிக சீவ

னென்றுஞ்சொல்லப்படுவன். சொப்பனத்திலே தூலசரீரத்
தைவிட்டு அந்தக்கரணத்துடனே கூடிநின்றபோது தைஜ
சனென்றும்,பிராதிபாசிக சீவனென்றும்,சொற்பன கற்பித
னென்றுஞ் சொல்லப்படுவன். சுழுத்தியிலே காரியசரீர தத்
துவங்கள் இருபத்தாறையுங் கைவிட்டுக் காரணசரீரத்தை
மாத்திரம் பொருந்தியிருக்கும்போது பிராக்ஞனென்றும்,
பாரமார்த்திக சீவனென்றுஞ் சொல்லப்படுவன். பிரமசை
தன்னியமும் சாக்கிரத்திற்குச் சாக்ஷியாயிருக்கும்போது
சீவாத்மாவென்றும், சொப்பனத்திற்குச் சாக்ஷியாயிருக்கும்
போது அந்தராத்மாவென்றும், சுழுத்திக்குச் சாக்ஷியாயி
ருக்கும்போது பரமாத்மாவென்றும், அவஸ்தாத்திரய சா
க்ஷியாயிருக்கும்போது ஞானத்மாவென்றும்,கூடஸ்தனென்
றும் சொல்லப்படும். இப்படிச் சீவனுக்கு மூன்றுசரீரங்க
ளும், மூன்றவஸ்தைகளுஞ் சொல்லப்பட்டன.

இனி ஈசுரனுக்கு மூன்றுசரீரங்களும், மூன்றவஸ்தை
களுஞ் சொல்லப்படும். கற்பிதப்பிரபஞ்சவடிவமாகத்தோன்
றுகின்ற தூலபஞ்சபூதங்களும்,அந்த பூதங்களிலே தோன்
றின மூன்று சாதியாயிருக்கின்ற தூலசரீர சமஷ்டியுங்கூடி
ஈசுரதூலசரீரமென்றும், விராட்டென்றுஞ்சொல்லப்படும்.
இதனுடனேகூடிச் சாக்கிராவஸ்தையைப் பொருந்துகின்ற
ஈசுரன் வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் அ
திஷ்டான சைதன்னியம் பிரமாவென்றுஞ் சொல்லப்படும்.

சூட்சும பூதங்கள் ஐந்தும், அந்தப் பூதங்களிலே
தோன்றின சூட்மசரீர சமஷ்டியுங்கூடி ஈசுர சூட்சும சரீர



மென்றும்,இரண்யகர்ப்பமென்றுஞ் சொல்லப்படும். இதனு
டனேகூடிச்சொப்பனவஸ்தையைப்பொருந்துகின்றஈசுரன்
சூத்திராத்மாவென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான
சைதன்னியம் விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும்.

இந்தத் தூலம் சூட்சுமம் இரண்டின் வாசனையுடனே
கூடியிருக்கின்ற மாயை ஈசுர காரணசரீரமென்றும், அவ்
வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச்
சுழுத்தியவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் அந்தரி
யாமி யென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சை
தன்னியம் உருத்திரனென்றுஞ் சொல்லப்படும்.

சீவன், தன் மூன்றவஸ்தைகளிலும் தன் மூன்றுசரீ
ரங்களாயிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும் நா
னென்று கலந்து நிற்கின்றதுபோல, ஈசுரனுந் தன் மூன்ற
வஸ்தைகளிலுந் தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்
பத்திரண்டு தத்துவங்களுடனுங் கலந்துநிற்பன்.

ஆகையினலே சீவ சிதாபாசன் தன் சரீரமாத்திரமே
கலந்துநிற்பன். ஈசுரன், தன்சரீரமாகிய சகலசரீரங்களோ
டும் சகலபிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பன். இந்த இருவ
கைக்கும் சாக்ஷியாயிருக்கின்ற பிரமசைதன்னியமும்,சகல
சரீரங்களிலும், சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து அப்பா
லும்பத்துத்திக்கையும்அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

சீவனுக்குத் தூலசரீர வியவகாரத்திற்கு அன்னமய
மான சட்கோசதத்துவங்கள் - ௬, சூட்சுமசரீர தத்துவங்

கள் - உ0, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு. ஆகத்தத்துவங்கள் - ௩௧.

சூக்ஷுமசரீர வியவகாரத்திற்குசூக்ஷுமசரீரதத்துவங்கள்-உ0. சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம் - ரு ஆகத்தத்துவங்கள்-உரு.

காரணசரீர வியவகாரத்திற்கு சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு. சீவவியவகாரத்திற்கு சீவன், ஈசுரன், பிரமம்-௩. சாட்சிவியவகாரத்திற்கு சாட்சி - க. ஈசுரனுக்குத் தூலசரீரவியவகாரத்திற்கு சமஷ்டி அன்னமயகோச தத்துவங்கள்-சு. சமஷ்டிசூக்ஷுமசரீரதத்துவங்கள்-உ0. சமஷ்டி சீவன், அவித்தை-உ. ஈசுரன், வித்தை, பிரமம்-௩. தூலபூதங்கள்-ரு. ஆகத் தத்துவங்கள்-௩சு.

சூக்ஷுமசரீர வியவகாரத்திற்கு சமஷ்டி சூக்ஷுமசரீர தத்துவங்கள்-உ0, சமஷ்டி சீவன், அவித்தை-உ. சூக்ஷுமபூதங்கள்-ரு. வித்தை, ஈசுரன், பிரமம்-௩. ஆகத் தத்துவங்கள்-௩0.

காரணசரீர வியவகாரத்திற்கு வித்தை, ஈசுரன், பிரமம்-௩. ஈசுர வியவகாரத்திற்கு ஈசுரன், பிரமம்-உ. பிரம வியவகாரத்திற்கு பிரமம்-க. இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம்-க. சட்கோசதத்துவங்கள்-சு. அந்தக்கரணம்-ரு. வாயு-ரு. சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு. ஆகத் தத்துவங்கள்-உஉ.



மனோராச்சிய வியவகாரத்திற்கு அந்தக்கரணம்-ரு. சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு. ஆகத் தத்துவங்கள்-க0. இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும், நிலையுஞ் சொல்லப்பட்டன.

இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்றவழி சொல்லுகின்றோம்.

சகல சீவரிடத்திலு மிருக்கின்ற தூலசரீரங்களனைத்தும், தமக்கு ஆதாரமான தூலபூதங்களிலே மடிந்து, பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூலபூதங்களும், பஞ்சீகரணம்விட்டுத் தன்மாத்திரைகளான தமோகுண பூதங்களாகமிஞ்சும். அப்போது கேவலம் இரண்யகர்ப்பாவஸ்தையென்று சொல்லப்படும். சூக்ஷுமசரீரதத்துவங்களிருபதுங் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவகுணமும், இரஜோகுணமுமாக ஒடுங்கும். அஃதெங்ஙனமெனின்:—

சகலபிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும்,உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்நுவையும், சமானனும், பாயுருவும் அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும், தொக்கும், பிராணனும், பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குணபூதங்களாகும். இந்தச் சூக்ஷுமபூதங்களும், பிருதுவி அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியிற்சுவறி ஒடுங்

கும். அக்கினியும் விளக்குப்போல வாயுவிலணைந்து ஒடுங் கும். வாயுவும் ஆகாசத்திலே ஒய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேபசத்தியில் ஒடுங்கும். ஆவரணசத்தியும்,விக்ஷேபசத் தியும் மூலப்பிரகிருதியின் தமோகுணமாத்திரமாய் ஆல மரம் ஆலம்விரையில் ஒடுங்கினாற்போல இன்னம் ஒருசிரு ஷ்டிக்கு வித்தாக மாயையிலும், அவித்தையிலும் ஒடுங்கும். இந்தமாயையும், அவித்தையும் அதிநுண்மையான மூலப் பிரகிருதியென்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்தவிந்துவும், பாம்பென்கின்ற பெயர்போய்ப் பழுதையாகக் கண்டாற்போலத் தனக்கு அதிஷ்டான சை தன்னியமான பிரமசைதன்னிய மாத்திரமாக ஒடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருள் ஒன்றாகக் கண்டு, அதுவே சுபாவசித்தமாய் கிசமாயிருக்கின்ற தன் வடிவெனக்கண்டு தெளிந்துகவலைகெட் டிருக்கின்றவனே சீவன்முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல் லப்பட்டது.

இப்படித் தோற்றி ஒடுங்கின தத்துவங்கள்-ருசு. அவையாவன:—

பூதங்கள்-ரு. ஸ்தூல சரீரதத்துவங்கள்-சு. சூக்ஷம சரீர தத்துவங்கள்-உ0. காரணசரீரமான மாயை, அவித் தை-உ. இவற்றில் பிரதிவிம்பித்த சீவன், ஈசுரன்-உ. இவை கட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமா யிருக்கின்ற * பிரமம்-க. ஆ. ருசு.

* பிரமத்திற்குத் தோற்றமொடுக்கங்கூறினது நாமகற்பனை யைப்பற்றியென்க.



இவைகளில், பூதங்கள்-ரு. மாயை-க. மாயாப்பிரதி விம்பரான ஈசுரன்-க. பிரமம்-க. ஆ. இந்த எட்டும் சகல பிராணிகளுக்குஞ் ‡ சமுதாயமாக வநுபவிக்கப்படும். மற் றை இருபத்தெட்டும், அவன் அவனுக்குப் † பிருதக்காக வனுபவிக்கப்படும். அஃதெங்ஙனமெனில், பிருதுவிதத்து வம் ஒன்று இறக்கில் எல்லாருக்கும் ஆதாரமில்லை. மழை மறுக்கில் எல்லாருக்குஞ் சலமில்லை.தேயுவில்லாதிருந்தால் பாகமில்லை.வாடை தென்றல் இல்லாவிட்டால் வாயுவியக்க மில்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் அவகாசமில்லை. மாயையும், மாயாப்பிரதிவிம்பரும் இறக்கில், சகலசமயங் களுக்குந் தெய்வமில்லை. பிரமமில்லையேல் ஒருவருக்கும் அறிவில்லை. ஆகையால் இந்த எட்டும் எல்லாருக்குஞ் சமு தாயமாம். பிருதக்கு எங்ஙனமெனின்,ஒருவனுக்கு ஸ்தூ லசரீரம் இறக்கில், எல்லாருக்கும் ஸ்தூலசரீரம் இறவாத படியினாலும்,சூக்ஷமசரீரத்தில் ஒருவனுக்கு அங்க ¶ வை கல்யம் வந்தால் எல்லாருக்கும் வாராதபடியினாலும், முத் தராயிருந்த சுகர், வாமதேவர் முதலானபேருக்கு அவித் தையும்சீவனும்இறந்துபோயிருக்க, மற்றைப்பேருக்கெல் லாம் அவித்தையும், சீவனும் இறவாதபடியினாலும்,இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் அவனவனுக்குப் பிருதக் கென்பதிலேசந்தேகமேயில்லை.

இந்தத் தத்துவங்கள் ருசு-ல் எப்போதும் தானாகவே காணப்படுகிற தத்துவம்-க. எப்போதும் தனக்கன்னிய

‡ சமுதாயம் - பொது. † பிருதக்கு - வேறு.

¶ வைகல்யம் - குறைவு.

மாகக்காணப்படுகிற தத்துவங்கள்-௭. தானாகவும் தனக்கன்னியமாகவும் அநுபவிக்கப்படுகிற தத்துவங்கள்-௨௮. அஃதெங்ஙனமெனில்:—

அவஸ்தாத்திரய சாக்ஷியாயிருக்கின்ற பிரமசைதன்னியம் எல்லாவவஸ்தைகளிலுந் தானாக விளங்குகையினாலும், மற்றத் தத்துவங்கள்போலத் தனக் கன்னியமாக விளங்காதபடியினாலும் அந்தப் பிரமசைதன்னியம் ஒன்றுமே தானாகக்காணப்படுகிறது. பஞ்சபூதங்கள்-௫. மாயை, மாயாப்பிரதி விம்பர்-௨. ஆக ஏழும் தந்தந் தொழிலான வெட்டு, குத்து, உழவு, பஞ்சகிருத்தியம், தசாவதார முதலானவை ஒருகாலும் தன்னுடைய தொழிலாகக் காணப்படாதபடியினாலே தனக்கன்னியங்களே யல்லாமல்தானாக மாட்டா. மற்றை ௨௮-தத்துவங்களுள்ளே நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சன்னியாசி, நான் ஆண்மகன், நான் பெண்மகள், நான் கறுவல், நான் சிவலை, நான் கட்டையன், நான்நெட்டையன், நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்று தானாகவழங்குகிற ஸ்தூலசரீரம் ஆறுதத்துவங்களும், மற்றொரு வேளையிலே தனக்குப்புறம்புபட்டு என்மாடு, என் கன்று என்றாற்போல என் சரீரம்பருத்தது, என்சரீரம் இளைத்தது, என்மயிர் நரைத்தது, என்சரீரம் பிறந்துஇத்தனை நாளாயிற்றென்று தான்வேறு, தூலசரீரம் வேறாக வழங்குகிறபடியினாலும், நான் கண்டேன், நான் கேட்



டேன், நான் தொட்டேன், நான் போகித்தேன், நான் கொடுத்தேன், நான் வாங்கினேன், நான் நடந்தேன், நான் புசித்தேன், நான் சிந்தித்தேன், நான் நிச்சயித்தேன், நான் இந்தப்பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று தானாகவழங்குகிற சூக்ஷுமசரீர தத்துவங்கள் இருபதும், மற்றொருவேளையிலே தனக்குப்புறம்புபட்டு என்வீடு, என் உடைமை என்றாற்போல என்கண், என்காது, என்மூக்கு, என் நாக்கு, என்கை, என்கால், என்மனம், என்புத்தி, என் அகங்காரம், என்சித்தம், என்பிராணன் என்றுதான்வேறு அவைகள்வேறாக வழங்குகிறபடியினாலும், நான் அறிவேன், நான் அறியேன் என்று தானாகவழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும் மற்றொருவேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் அஞ்ஞானம், என்சீவன் என்று வழங்கக்கண்டபடியினாலும் இந்த ௨௮-தத்துவங்களும் தானாகவும், தனக்கு அன்னியமாகவும் வழங்குகின்றது சித்தம்.

இப்படிச்சொன்ன குருவைப்பார்த்துச் சீடன் கேட்கும்படி இந்த ௨௮-தத்துவங்களுந் தானானால், சாட்சியைப் போல ஒருதன்மையாகத் தோற்றவேண்டுமே யல்லாமல், பஞ்ச பூதங்களைப்போலத் தனக்கன்னியமாகக் காணக் கணக்கில்லை. இந்த ௨௮-ம் தனக்கன்னியமேயானால் எப்போதும் புறம்புபட்டே இருக்கவேண்டுமல்லாமல் தானாக வழங்கக் கணக்கில்லை. தானுமாய், தனக்கன்னியமுமாய் இருக்குமென்கிறது இருட்டாதித்தன் என்றாற்போலும், வெள்ளாழ தீட்சிதன் என்றாற்போலும் விருத்தமா மென்

னுஞ் சங்கைக்கு? பரமார்த்தமாகத்தான் என்கின்றது ஒருவகையும், அத்தியாசத்தினாலே தான் என்கின்றதுஒரு வகையும்ஆக இருவகையும்உண்டு.சாட்சிசைதன்னியத்தைத்தான் என்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கன்னியமாயிருக்கின்ற இந்த உ௮-யும் தான் என்கின்றது கட்டையைக் கள்ளனென்றாற்போலும், பழுதையைப் பாம்பென்றாற்போலும், புத்திரதாராதிகளைத் தான் என்றாற்போலும், மயக்கயேயல்லாயல் உண்மையல்ல. ஆகையினால் அஞ்ஞானகாலந் தொடங்கித்தா னல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள்-௭. இப்போது இப்படிக் கொத்த விவேகம்பண்ணின பிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள்-உ௮. ஆக இந்த ௩௬-தத்துவங்களையும் அததற்குச்சொன்னகுணம், குறிகளுடனேகூடக் காண்கின்ற அறிவானது கடத்தைப்பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவேயிருந்து கடத்தைப் பார்க்கின்றது போல அவைகட் கன்னியமாகவேயிருந்து அவைகளை அறிகின்றதென்றும், முப்பத்தாறுந் தத்துவமாகிய அதுவே தானென்றும், அதுவே பரமசிவமென்றும் கலக்கமறத் தெளிந்தவனே சிவதரிசனமுடைய சீவன்முத்தனென்று சொல்லப்படுவனென் றுத்தரம்.

இப்படிப் பிரமமே தாயென்றும், மற்றை ௩௬-தத்துவங்களும் தமக்கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்தியினாலே புத்திரதாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறோம் என்கின்ற மூடகரய்போல



இந்த உ௮-னுடைய தொழில்களையும் தம்தொழிலென்று மயங்குகின்றபடியினாலே இந்த உ௮-னாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களினாற் கட்டுப்பட்டு அந்தக்கர்மத்தின்படியே சனனமரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறோமென்று மயங்குவர்.

பிரமசைதன்னியமே தானென்றும், மற்றை ௩௬-ம் தானல்லவென்றுந் தெளிந்த விவேகியானவன் அகங்காரக் கிரந்தி யற்றபடியினால் இந்த உ௮-னுடைய தொழில்களையும் நான் செய்யவில்லையென்றும், இந்த உ௮-ம் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லையென்றும் திடப்படத்தேறி மயக்கமற்றிருக்கின்றபடியினால் இந்த உ௮-னாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கர்மமில்லாதபடியினால் சனனமரணாதி சம்சாரமில்லாமல் முத்தனாய்ப் பிரமமாத்திரமாகவே யிருப்பன்.

---

இவனைச் சீவன்முத்தனென்றும், திடப்பிரக்ஞனென்றும், அதிவர்ணாச்சிரமியென்றும், குணாதீதனென்றும், பகவற்பத்தனென்றும், பிராமணனென்றும் வாசிட்டமுதலிய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம்பண்ணி மோக்ஷமடையக்கடவர்.

நாநாசிவவாதக்கட்டளை

முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# சாற்றுக்கவி.



இப்புவியினிடையே யெழுமிரசதம்போ
லென்றுமா யிலகியின்பாகி
யொப்பிடவேது மின்றியபிரமத்
துற்றிடும் பகுதிமுன்னுய
வப்பிரபஞ்ச முறைமையைத்தூல
வருந்ததி நியாயமேயென்னச்
செப்பினன்யாருந் தெளிவுறச்சேஷாத்
திரிசிவ னென்னுமாதவனே.

முற்றிற்று.

---

உ

ஸ்ரீ-கிருஷ்ணயபரப்பிரமணேநமஃ

திருவேங்கடநாதரருளிச்செய்த

# கீதாசாரத் தாலாட்டு.

மூலமும்

மடப்புரம், ஆ. செ. துரைச்சாமிநாயக்கர்
அவர்கள் வேண்டுகோளின்படி
பிரமானந்த சாகரசொரூபராகிய
ஸ்ரீ கோயிலூரர்ச் சிதம்பர சுவாமிகள்
மாணாக்கராயும்,
திருவாரூரைச் சேர்ந்த வன்மீகபுரத்திலெழுந்தருளிய
ஸ்ரீ குருதக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
ஆதீனத்திற்குரியவராயுமுள்ள,
மதுரை
சிவானந்தசுவாமிகளியற்றிய
உரையும்.

—:o:—

ஷை சுவாமிகள் மாணாக்கராகிய,
நாகப்பட்டணம் றெயில்வே ஸ்டேஷன்மாஸ்டர்
திரிசிரபுரம், நீ. சண்முகம்பிள்ளையவர்களால்
...ாரணியவர்கள் கைத்தொழிற்பாடசாலை அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

---

விகிருதி௵-தைமீ.

1891.

விலை அணா-4.] 

...பதமபணிகுதும்




உ

சிவமயம்.

# கீதாசாரத்தாலாட்டு.

உரைச்சிறப்புப்பாயிரம்.

இஃது

தேவிகோட்டை

வீ. ர. லெ. சின்னயச்செட்டியாரால்

இயற்றப்பட்டது.

---

போதார்பொழில்சூழ்வன்மீகபுரத்திற்பொலியுஞ்செங்கழுநீர்
மாதார்த்தட்சிணாமூர்த்திமடத்துக்கதிபன்றுரியசி லை
மீதாய்த்திகழுஞ்சிவானந்தமேலோன்விரித்தமெய்யுரையாற்
கீதாசாரத்தாலாட்டுக்கிளர்ந்தோங்கியதுநீணிலத்தே

---

இஃது

## உரைப்பாயிரம்

### தெய்வங்களின் வணக்கம்.

---

ஐங்கரனறுமுகனருண்மிகுமம்பிகை
சங்கரனயனரிதமைவணங்குதுமே

### குருவணக்கம்

—:o:—

சிதம்பரமாயொளிர்நின்மலமோனச்
சிதம்பரகுருபதந்தினம்பணிகுதுமே

### [illegible] வணக்கம்

---

சிதம்பரதேசிகன்செய்யபொற்கமலப்
பரம்பரமௌனிகணைபவர்பதம்பணிகுதும்

## அவையடக்கமும், உரையின்பிரயோசனமும்.

———:o:———

நங் குருநாதனந்தம்நாவினின்றியற்றுவித் த
பங் கயில்கீதாசாரப்பாக்கடமுறையுட்கொள்வோர்
சங் கரனயன்மால்தேவர்சகலரும்புகழ்வதா ன
துங் கமார்சீவன்முத்திச்சுகமனுபவிப்பர்தா மே

## அவதாரிகை.

வடமொழி தென்மொழியில் வல்லமையுள்ள திருவேங்கடநாதனென்னு நூலாசிரியர், தமது பெருங் கருணையினாற்கூறப்புகுந்த விந்நூலானது, நிர்விக்கினமாய் நிறைவேறிப்பெரியோர்களா லங்கிகரிக்கப்பட்டுப் படிப்பவர், கேட்பவர்கட்கே காக்கிரமுதலியனவோ டத்துவித ஞானம் பாலித்துப்பாரம்பரியமாய் வழங்கிவரும் பொருட்டுத் தமது வழிபடு கடவுளாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை ஞான சூரியனாகத்துதிக்கின்றார்.

———

ஐவகைப்பொருளுநான்குகரணமுங்குணங்கண்மூன் றுஞ்
செய்வினையிரண்டுமொன்றியாவருந்திகைப்பநின் ற
பொய்யிருள்கலஞானப்பொருட்கதிர்விரித்தபுத்தே ள்
கைவளையாழிச்செங்கட்கண்ணனைக்கருத்துள்வைப்பா ம்

## இதன்பொருள்.

*ஐவகை-ஐந்துபிரிவாகிய, பொருளும் - பொருட்க[illegible]யும், நான்குகரணமும் [illegible]ன் மென்னுந்தொழி[illegible]யத்தையும், குணங்கண்மூன்றும்-(பிரகாசம்-பிரவிருத்தி மோகமேசொரூபமாயுள்ள-சாத்வீக-இராஜத - தாமத[illegible]ன்னும்) திரிகுணங்களையும், செய் - (மனவாக்குக்காய[illegible]ளாற்) செய்யப்பட்ட, வினையிரண்டும் (புண்ணியபாவ



கிய) உபயகன்மங்களையும், ஒன்றி-யானென தென்பதாகப்பொருந்தி, யாவரும் - சருவத்திரர்களும், திகைப்ப மயங்குதற்குக் காரணமாக, நின்ற-(மறைப்பேசொரூபமாக) நிற்கின்ற, பொய்யிருள்-மித்தையாகிய அஞ்ஞானாந்தகாரமானது, அகல -பரிபக்குவர்கட்கு நிவிர்த்தியாகும்படி, ஞானப்பொருட்கதிர்-ஞானார்த்தங்களாகிய கிரணங்களை, விரித்த-பரப்பிய, புத்தேள்-தெய்வமாயுள்ள, வளை-(பாஞ்சசன்னியமென்னுஞ்) சங்கையும், ஆழி-(சுதரிசனமென்னுஞ்) சக்கரத்தையுந்தரித்த,கை-திருக்கரங்களையும், செங்கண்-சிவந்த (தாமரைமலர்போன்ற)நேத்திரங்களையுமுடைய, கண்ணனை-(ஞானதினகரனென்னும்) ஸ்ரீகிருஷ்ணபகவானை, கருத்துள் வைப்பாம் - இருதயத்தினுள் அபேத[illegible]வைத்துத்தியானிப்பாம்-(என்றவாறு.)

பொருளும், மூன்றும், இரண்டும், என்பவைகளில் இரண்டனுருபும். கரணமும், என்றதில் சாரியையும் - இரண்டனுருபும் தொக்கன;;

*சத்தஸ்பரிசாதி விஷயங்கள் (௧) சுரோத்திராதிஞானேந்திரியங்கள், (௨) வியானாதிவாயுக்கள் (௩) வாக்காதிகன்மேந்திரியங்கள் (௪) சருமாதியாறுதத்துவமாகிய தூலசரீரம் (௫) இவ்வைந்து பிரிவாகிய பொருட்களையே தொகுத்து ஐவகைப்பொருளுமென்றார்.

---

## ஆக்கியோன்பெயரும், முதனூற்பெயரும், நூற்பெயருங்கூறல்.

———:o:———

[illegible]

[illegible]வெங்கடநாத ன்
காதையுறப்பார்த்தனுக்குக்கண்ணனருள் கீதைக்
கருத்துயர்தாலாட்டாகக்கட்டுரைத்தான்யாரு ங்
கருத்துயர்தீர்ந்தெய்தக்க தி

(இ-ள்)

∴ மாதையர்-மாதைப் பதியிலுள்ளவர்களுக்கு, கோன்-அரசனாகிய, *வேதநவில்-வேதாத்தியயனம் பண்ணுகின்ற, வாய்-வாக்கினையுடைய, வேங்கடநாதன்-திருவேங்கடநாதனென்னும்பிராமண சிரேஷ்டரானவர், காதையுற-சொற் சுவைபொருந்த, பார்த்தனுக்கு-அருச்சுனனுக்கு, கண்ணன் - ஸ்ரீ கிருஷ்ண பகவான், அருள்-அனுக்கிரகம் பண்ணிய, கீதை-பகவற்கீதையினது, கருத்து-தாற்பரியமாகிய (ஞானார்த்தங்களை), உயர் † தாலாட்டாக-மேன்மைபொருந்தியதாலாட்டுப்பிரபந்தமாக, ‡ யாரும்-சருவத்திரர்களும், கருத்துயர்தீர்ந்து-ஜன்மதுக்கமானது நீங்கப்பெற்று, கதி-மோக்ஷத்தை, எய்த-அடையும் பொருட்டு, கட்டுரைத்தான்-உறுதிமொழியாகக்கூறினார் (எ-று)

*வேதநவில்வாய்வேங்கட நாதனென்றமையின் வேதாத்தியயனஞ்செய்குதல் பிராமணர்கட்கேமிகவுமுரித்தென்பதுபற்றி யுரையிற் பிராமணனென விரித்தெழுதினாம்.

†பதினெட்டத்தியாயங்களாற் கன்மம், பத்தி-ஞானார்த்தங்களை மிச்சிரமாய்க்கூறியுள்ள பகவற்கீதையின்கண்-கரும்பினின் றுமிரசத்தைக் கிரகித்தல்போல அந்தரங்கமான ஞானார்த்தங்களைச்சங்கரகித்துத் தாலாட்டுப்பிரபந்தமாகக்கூறினமையின் இது கீதாசாரத்தாலாட்டெனும் பெயருடைத்தாயிற்று.

‡தீவிரதர அதிகாரிகட்குப் பயன்படுதலுமன்றி மந்தாதிகாரிகட்குமினிதுவிளங்கிப்பயன்படுமென்பதுதோன்ற-யாருமென்றார்

∴. மாதைப்பதி யென்பதைச்சிலர் மாதேவிப்பட்டணமென்றும் சிலர்திருவாமாத்தூரென்றுங் கூறுவார்கள்.



# நூல்.

சீராரும்பரமார்த்ததெரிசனத்தையருள்செய்ய ... ப்
பேராருந்தேசிகராய்ப்பெருமானேவந்தவரோ ... (க)

இ-ள்.

(a.) பெருமானே- (ஸ்ரீபகவானாகிய எமது)பிரானே,சீராரும்-சச்சிதானந்த கனமாகிய) சிறப்பினைப் பொருந்திய, பரமார்த்ததெரிசனத்தை - எதார்த்தமாயுள்ள ஆத்மதரிசனத்தை, அருள்செய்ய - அருச்சுனனுக்கு அனுக்கிரகஞ்செய்யும் பொருட்டு, *பேராரும்-பெருமை நிறைந்துள்ள, தேசிகராய்-ஞானாசாரியராக, b. வந்தவரோ—எழுந்தருளி வந்தவரோநீர், (எ-று)

a. பெருமானேயென்பது விளி

b. வந்தவரோவெனச்செய்யுளினின்றிஉள்ள- ஓகாரம்வியப்புப் பொருளது-நன்னூல் - இடையியலில்- இரண்டாம்சூத்திரம்-இன்னன. வென்றதனுல்—பின்வருவனவுமிவ்வாறே.

*சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களில் சிருட்டி, திதி, சம்ஹாரந், திரோபவமென்னு நான்கினாலுஞ சம்சார துக்க நிவிர்த்தியாகாது அனுக்கிரகமொன்றினன் மாத்திரம் நிவிர்த்தியாகின்றமையா லனுக்கிரகமொன்றுமே பெருமையுடைத் தென்பது கூறுமேயமையும் அவ்வனுக்கிரகத்தைக்குரு மூர்த்தமாகவேயிருந்து செய்வதுமாபாயிருத்தலின் குருமூர்த்தியே பெருமையுடையாரென்பது தோன்றப், பேராருந்தேசிகராயென்றார்.

---

திருத்தேரிற்சாரதியாய்ச்சேர்ந்திருந்துங்கீதையி ... ஞ
[illegible]டைசெய்தவரோ (உ)

இ-ள்.

*திருத்தேரில்-சிறப்புப்பொருந்திய இரதத்தில், சாரதியாய்- தேர்ப்பாகராய், †சேர்ந்திருந்தும் - பொருந்தியிருந

தும், கீதையினல்-இசைபொருந்தியவுபதேசரூபமான தம. துவாக்கியத்தால், அருச்சுனற்கு-பார்த்தனுக்கு, மெய்ஞ் ஞானம்-தத்துவஞானம், ‡அனைத்தும்-முழுவதும், உரை செய்தவரோ-அனுக்கிரகஞ்செய்தருளியவரோநீர் (எ-று)

*அருச்சுனனுக்குக் காண்டவதகன சமயத்து அக்கினிபகவானு ற்கொடுக்கப்பட்டு நவரத்தினகசிதமாகிய சுவர்ணத்தூபிவைத்துச் சுவேதவாம் புரவிகள் பூட்டியனுமத்துவ ஜம்காட்டப்பெற்ற அழி யாத இரதமானதால்-திருத்தேரென்றார் - இன்னும் சச்சிதானந்த சொரூபமாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே ஞானசாரியமூர்த்தமாக எழு ந்தருளியிருந்து சத்தியவிரதனுகிய அருச்சுனனுக்குப் பிரமான்மைக் கிய ஞானோபதேசஞ்செய்தற்குஸ்தானமாக அமைதலின் திருத்தே ரெனக்கூறினரெனினும்அமையும்.

†சேர்ந்திருந்துமென-இறிவு சிறப்பும்மை கொடுத்துக்கூறியது யாதினலெனின், ஆசாரிய சிஷ்யக்கிரமம் பிறழ்ந்தமையினென்க அஃதாமாறு-தலையுரோமத்தி னெருப்புப்பற்றப் பெற்றவனும் சில தினமுபவாசமிருந்தவனும் யாதொன்றையும் விரும்பாதுஜலம்,அன் னமிவைகளையே அதிவிரைவாக விரும்பித்தேடிச்செல்வதுபோல ஜனன மரண சம்சாரத்தால் வருந்துபவன் அதனை நிவிர்த்திக்கத் தக்க ஞானசாரியரெய்ந்ளரெனத்தேடி வந்தஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்கார பூர்வகமாக வணங்கியெழுந்து வாச்கினுற் பலவாறு துதி துவருகிற சாதன சதுட்டயமுள்ள சிடனதிதீவரபக்குவனுக இருப் பின் ஏகாந்த ஸ்தானத்தில் அச்சிடன் மிகுந்த பயபத்தி விநயத் தோடு கைகட்டி வாய் புதைத்துத் தாழ்ந்த ஸ்தானத்தினின்று கேட்பத்தானுயர்ந்த வாசனத்தின் கண்ணிருந்து ஞானோபதேசஞ் செய்வது ∴.மரபாயிருக்க அங்ஙனமின்றி அருச்சுனனிருக்குமிடத் திற்குத்தான் வந்து அ[illegible] பலருங்கூடிய யுத்தக[illegible] னனை-அருச்சுனன் உன்னத ஸ்தானத்திருந்து கேட்பத்[illegible] தாழ்ந்த ஸ்தானத்திலொருபதமடித்தொருபதம் பொற்றேர் மி[illegible]



தொருகையிற் கசை குசைபிடித்தொருகையிற் சின்முத்திரை கொ ண்டிருந்துப தேசித்தமையால் சேர்ந்திருந்தும் என அவ்வுண்மை புணர்த்தாரென்றுணர்க.

∴. மரபென்பது தொன்றுதொட்டு வழங்குமுறைமை.

‡பரோக்ஷஞானம்-அபரோக்ஷஞானமென ஞானமிரண்டாம் அவற்றுள் அபரோக்ஷ ஞானமானது-அதிடாபரோக்ஷ ஞானமென வும்-திடாபரோக்ஷ ஞானமெனவு மிருவகைப்படுமிவை முழுது முபதேசித்தாரென்பது தோன்ற மெய்ஞ்ஞானமனைத்துமென்றார்.

செஞ்சமரிற்பந்துஜனஞ்சேதமுறுமென்றிரங் ... கி
யஞ்சியபார்த்தன்பயமாங்ககற்றவருளானோக்கி ... (௩)

இ-ள்

* செஞ்சமரில்-செவ்விதாகியயுத்தத்தில், பந்துஜனம்-உ றவினர்களாகிய யாவர்களும், சேதமுறு மென்றிரங்கி-நா சமடைவார்களென்றிரக்கமுற்று, † அஞ்சியபார்த்தன்-பய ந்துள்ள அருச்சுனனது, பயம்-பீதியை, ஆங்கு-அந்த யுத்த கள மத்தியிற்றானே, அகற்ற-நிவிர்த்தி செய்தற்கு, ‡ அரு ளால்-கிருபையோடு, §நோக்கி-பார்த்து,(எ-று)

* பாண்டவர்கள்செய்யுஞ் சமர்தர்மசாஸ்திரத்தையனுசரித்தரா கலின்செஞ்சமரென்றார்.—

† நம்குருவாகிய துரோணர், கிருபர் முதலியவர்களும் நம்குலத்தி அதிதத வீட்டுமர் துரியோதனுகியருமிவர்கட்குபபலமாக வந்தசுச னப்பரசனர்களாகிய மற்றைத்தேசத்தரசர்களும் தங்கள் தங்களுக் குரியசுகபோகங்களை யிழந்த்ந்த யுத்தகளத்தினம்மால் மரணமடை [illegible]க்கப்பட்டுள்ள யாவர் [illegible]யப்பட்டுவருகிற குல [illegible]வே குலங்கண் முழுது ம[illegible]ர்மத்திற் பிரவர்த்திக்கும்அதனுல் ஸ்திரிகள் நெறிதவறுவார்கள் அத[illegible]ல் வர்ணசங்கரமாகும் அதனுலவர்கள் நரகமடைவதுமல்லாம

லவர்களின் பிதிர்கணங்களும் பிண்டோதகங்களாற் செய்யப்படும் சிராத்ததருப்பணாதிகளா லுண்டாகும் பலனை யிழந்து துன்பமுறு வார்கள் இவைகளனைத்திற்கு நாமே காரணமாதலின் நம்மைக்குல க்ஷய கிருததோடம் வந்தடைந்து நரகிலமிழ்த்துமென்றச்சமுற்றவ ருச்சுனனென்டார் அஞ்சிய பார்த்தனென்றார்.

§அருச்சுனன் மோகத்தாலடைந்துள்ள பயம் நீங்கியாத்மஞான பரனாய்ச் சுதர்மங்களைச்செய்துவரு நிமித்தந் தீக்ஷாக்கிரமமாக அரு ச்சுனன்மீது பகவான் பூரண திருஷ்டிவைத்தமைதோன்ற நோக் கியென்றார்.

‡பகவான் தனக்கேதேனுமோர் பிரதியுபகாரங்களை யபேக்ஷியா டனேக்கினொன்பதுவிளங்க அருளால்நோக்கியென்றார்.

---

சுற்றமறிற்சோகமெனச்சொல்லினைசற்றறிந்தவன் போற்
கற்றுணர்ந்தபேரதனாற்கலங்கார்காணென்றவரோ (௪)

இ-ள்.

சுற்றமறில்-பந்துவர்க்கங் கனாசமடையுமானால், சோக மென-துக்கம் (வந்துபொருந்து)மென்று, *சற்றறிந்தவன் போல்-கிஞ்சித்துச் சாஸ்த்திரந்தெரிந்தவன்போல, சொல் லினை-கூறினாய்,கற்று-(கற்கவேண்டியசாஸ்திரங்களைக்)கற் று, உணர்ந்தபேர்-(அறியவேண்டியவைகளை)யறிந்தமகான் கள், அதனால்-பந்துவர்க்கங்கட்குநேரிடுங்கெடுதியினால்,†கல ங்கார்-கலக்கமடையார்கள், காணென்றவரோ-அதனை நீ அறிவாயாகவென்று கூறியருளியவரோநீர் (எ-று)

*தன்னுடைய தேகாதிகட்கு நேரிடுங்கெடுதிகள் பற்றியே தனக் கொருகெடுதியும் வாராதென்பது சுருதியுத்தி யனுபவங்களுக்கொ த்த துணியாயிருக்க அ[illegible] பற்றித்தனக்குங்கெடுதி[illegible] தேகாதிகட்கும் அறிவுசொரூபமாகிய ஆதமாவிற்கும்[illegible] யாதொருசம்பந்தமுமின்றென்றும் க்ஷத்திரியர்கட்குத் தட்[illegible]க்கி ரகஞ் சபதங்காத்தன்முதலியசுதர்மங்களைக்கைவிடுதல் பாவ[illegible]மன



வும் அருச்சுனன் மோகத்தாலற்பமேனுமறியாமல் துட்டர்களாகிய தரியோதனாதியரைக்கொல்வது பாவமெனவும் அப்பாவத்தாற்று ன்பம் வருமெனவுங் கூறினமையாற் சற்றுமறியாதவனென்பது தோன்றச் சற்றறிந்தவன்போலென்றார்.

†ஓரவத்தை மற்றோரவத்தையினிலைபெறாது கெடுதலையுறுகின் றமையின் அவத்தாத்திரையப் பிரபஞ்சங்களனைத்தும் எந்தவேது க்களினானு நிலைபெறாதழியத்தக்கனவெனவும் சுத்திகாரசிதங்கான ற்சலம்போல் மித்தையெனவும் ஆத்மா அவத்தாத்திரயங்களொன் றிலொன்று நிலைபெறாதுகெடுதலையுறினும் தான்கெடுதலுறாமலவை களைச் சாட்சிமாத்திரமாகவிகாரமின்றியறிந்து கொண்டிருத்தலின் எந்தக்காலத்தினும்எந்தவேதுக்களினானுமழிவையுறாது நித்தியமாயி ருக்கத்தக்க சத்தியப்பொருளெனவும் சுருதி-யுத்தியனுபவங்களால றிந்த பெரியோர்கள் தேகாதிப்பிரபஞ்சங்கட்கு நேரிடுங்கெடுதிக ளைக்கி கலக்கமுறார் களானமையின் கற்றுணர்ந்தபேரதனாற் கல ங்கார்காணென்றார்.

---

கலங்காரோவிறப்புவரிற்கற்றுணர்ந்தபேரோ ... ஐ
மலங்காமனானிருக்கும்வகையுரையுமெனவினவ ... (௫)

இ-ள்.

இறப்புவரில்-மரணம் வந்தகாலத்து, கற்று-கற்கவேண்டிய வைகளைக் கற்று, உணர்ந்தபேரோனும், அறியவேண்டிய வைகளை யறிந்த மகான்கள[illegible]யினும், [illegible]ங்காரோ-கலக்க முறார்களோ— (கலக்கமு[illegible]ர்களாகி லவர்களைப் போல) நான்-யானும், ம[illegible]மயக்கமுறாமல், இருக் [illegible]இருக்கத்தக்க[illegible]பாயங்களை, உரையுமென [illegible]மென்றருச்சுனன் கேட்க,-எ-று).

நான், என்பதில் இறந்தது தழுவிய எச்சவும்மைவிகாரத் [illegible]ற் றொக்கது.

நீயுநானும்புவிமேனிருபர்களுமெய்யுணர்வா
லாயுங்காற்பிறந்திறப்பதார்க்குமிலேயென்றவரோ (௬)

இ-ள்.

நீயும் - அருச்சுனனாகிய நீயும், நானும் - பகவானாகியயானும், புவிமேனிருபர்களும்-பூமியின் கண்ணுள்ள அரசர்களுமாகிய, ஆர்க்கும்-எவர்களுக்கும், மெய்யுணர்வால்-உண்மை ஞானத்தால், ஆயுங்கால்-விசாரிக்குமிடத்து, பிறந்திறப்பது - ஜனித்துமரிப்பது, இலேயென்றவரோ-இல்லையென்று கூறியருளியவரோநீர், (எ-று).

உம்மை நான்கில் ஈற்றிலுள்ளது முற்றும்மை ஏனையஎண்ணும்மையாம்.

---

ஈங்கெவர்க்கும்பிறந்திறப்பதில்லேயென்றீரிவ்வுல கி
னிங்குபவம்யார்க்கிதனை நிச்சயமாய்ச்சொல்லுமென (எ)

இ-ள்.

ஈங்கு-இவ்விடத்தில்; எவர்க்கும்-சருவத்திரர்களுக்கும்; பிறந்திறப்பதில்லேயென்றீர்-ஜனித்துமரிப்பதின்றென்றுகூறினீர்; இவ்வுலகில் - இவ்வுலகத்தின் கண்ணே; நீங்குபவம்-மரித்தல் ஜனித்தலானவை; யார்க்கு-எவர்களுக்குள்ளன; இதனை-இவ்வுண்மையை; நிச்சயமாய்ச்சொல்லுமென உறுதியாகச்சொல்லுமென்றருச்சுனன்கேட்க; (எ-று)

ஈங்கு-சுட்டுநீண்டுவந்தது செய்யுளாதலின், நீங்குதல்; என்னுந்தொழிற்பெயர்இங்கே-நீங்கு-எனமுதனிலே மாத்திரையாய்நின்றது.

---

இத்தரையிற்பிறந்திறப்பதெடுத்தவுடற்கடுத்த பொறி
நித்தியமாகியவான்மாநின்சொரூபமென்றவரோ (அ)

இ-ள்.

இத்தரையில்-இப்பூமியின்கண்; பிறந்திறப்பது-ஜனித்தரிப்பது; எடுத்தவுடற்கு-கருமத்துக்கேதுவாக வெடுத்த[illegible]



ள்ள சரீரத்துக்கு; அடுத்தபொறி - பொருந்தியவிதியாம் *நித்தியமாகிய-(ஜனித்தன்மரித்தலின்றிநித்தியமாயுள்ள; ஆன்மா-ஆன்மாவே, நின்சொரூப மென்றவரோ - உனது சொரூபமென்று கூறியருளியவரோநீர்-(எ-று)

ஆன்மா என்பதில் பிரிநிலே ஏகாரம் விகாரத்தாற்றொக்கது.

*பிராகபாவம் பிரத்தோம் சாபாவம் அன்னியோன்னியாபாவம்-அத்தியந்தாபாவமென்னு நான் கபாவமுமின்றிச்சதோதயமாயிருப்பதெதுவோ அதுநித்தியம் நித்தியமாயுள்ள ஆன்மாவே தானெனும்விசாரமறியவிரும்பில் எமதுகருணைக்கடலென்னும் பிரமானந்த சாகரசொரூபராகிய கோவிலூர்ச்சிதம்பரசுவாமிகள்செய்தருளிய இலக்கணவிருத்தியிற்காண்க-

---

அங்கமுயிரிந்தியநானன்றிவேறெனைக்கா ணே
னிங்கியான்வேறுண்டேலெனக்கறியப்புகலுமென (கூ)

இ-ள்.

அங்கம்-சரீரமும்; உயிர்-பிராணனும்; இந்தியம்-இந்திரியங்களும்; நானன்றி-யானென்றறிந்துளனேயல்லாமல்; வேறு-இவைகளுக்கன்னியமாக; எனைக்காணேன்-எனதுசொரூபத்தைக்கண்டிலேன்; இங்கு-இச்சரீரங்களினிடமாக; யான்வேறுண்டேல் - எனதுசொரூபமிவைகட்கன்னியமாகவிருக்குமேயாகில், எனக்கறியப்புக[illegible]மென-அடியேனுக்குத தெரிந்துக்கொள்ளும்படியனுக்[illegible]கஞ் செய்தருளவேண்டுமென் றருச்சுனன்கேட்க-;[illegible]

அங்கம்- உயிர்-பிராணன் - [illegible]ம்-ஆகிய இவைகளில்
[illegible]

[illegible]நா[illegible]ய்யுயிரிந்தியங்களல்லாலமேவறறியேனென்றவனு[illegible]ம்
[illegible]பாவவையாலறியப்படாதுநீயென்றவரோ (௰)

மேவாத்து விதமென்னுஞ் சொற்கிடையுளேகமெனுஞ் சொல்லதனுக்கயிக்க மரிதிலுணரேவவென்னுமிடைச்சொற்குத்தேற்ற மத்துவிதமெனா மொழிக்குத்துவித விலக்காகக்-ஈருதுபொருள் வருதலினாலிம்முறையேமாயகற்பனைகள் கடந்து நிரவயமாகியென்றுந்-திரிதலில்சின்மயமாகுமொரு பிரமந்தனக்குத்தெரித்த சுவகதமுதலாயின மூன்றுமிலையே" -எனவும்-பிரமகீதை-௰௧-வது கடவல்லியோடு சுவேதாச்சுவதரவுப நிடதார்த்தங்களுரைத் தவத்தியாயத்தில்-"பரம்பரனை - யல்லாதொன்றுமில்லையெனவனுபவத்தாலகத்துணர-வல்லார்தமக்குப்பேரின்பம்வடிவாய் மொழியுமாமறைதான்"-எனவுங்கூறியிருப்பது காண்க.

(2) பேதப்பிராந்தியினிலக்கணத்தையும், அப்பிராந்திநிவிர்த்தியாதற்குரிய திருட்டாந்த சகிதமாகிய விசாரங்களையும்அறிய விரும்பில் விசாரசந்திரோதயம். ௯-வது கலையிற்காண்க.

---

சீவபேதம்போமோ சித்தொன்றாமோவென. வே
யாவன்மன மறுஞ்சுழுத்தியவத்தையிற்பாரென் றவரோ (௮௧)

இ-ள்.

சீவபேதம்போமோ-சீவத்துவாதிபேதங்கணீங்குமோ, சித்தொன்றாமோவெனவே-ஒன்றாகிய சின்மாத்திரசொரூபமாகுமோவென்றருச்சுனன் கேட்க, ஆவல்மனம்-விடயங்களிலிச்சையுள்ளமனமானது, அறுஞ்சுழுத்தியவத்தையில்-கெட்டுப்போகாநின்ற சுழுத்தி (1) யவத்தையில், பாரென்றவரோ-பார்ப்பாயென்றுகூறியருளியவரோ நீர், (எறு).

(1) அவத்தையென்பதுகாலம்.

---

பேதமலவிவ்வுலகம்பிரமமயமென் றறிந்து ம்
பூதமயமாய்த்தோற்றல்போகாததேதெனவே (௮௨)



இ-ள்.

இவ்வுலகம்-இந்தப்பிரபஞ்சமானது, பேதமல - (பிரமத்துக்கு) வேறல்ல, பிரம *மயமென்றறிந்தும் - பிரமசொரூபமேயென்றறிந் †திருந்தும், பூதமயமாய்த்தோற்றல்-பஞ்சபூதமயமாகத்தோற்றுதல், போகாததேதெனவே - நீங்காததுயாதினாலென்றருச்சுனன் கேட்க, (எறு).

(*)மயமென்றதில்-தேற்றேகாரம்விகாரத்தாற்றொக்கது

(†) இருந்தும் என்றதிலுள்ள உம்மைஉயர்வுசிறப்புப்பொருளது.

---

கானலைநீரென்றோடிக்கண்டவர்க்குத்தீர்ந்தபின்னு ம்
வானுலவுநீராகிவயங்குதல்போலென்றவரோ (௮௩)

இ-ள்.

கானலைநீரென்றோடி-பேய்த்தேரினைச்சலமெனக்கருதிச்சென்று, கண்டவர்க்கு-(இதுசலமல்லபேய்த்தேரென்றறிந்தவர்க்கு)தீர்ந்தபின்னும்-சலமென்னும்பிராந்தி) நீங்கியபின்னரும், உலவு-செல்லுகின்ற, வான்-சிரேஷ்டம் பொருந்திய, நீராகி-சலம்போலாகி,வயங்குதல்போல்-(பேய்த்தேர்)தோன்றுதல்போல,(பிரபஞ்சத்தைப்பிரமமயமாகவறிந்திருக்கினும் பஞ்சபூதமயமாகத்தோற்றிக்கொண்டிருக்கும்,என்றவரோ-என்றுகூறியருளியவரோநீர், (எறு).

எஞ்சியதாட்டாந்தரத்தை விரித்தாம் - பிராந்தி என்றது அவாய்நிலையான்வந்தது.

---

அறிவானுநல்லறிவுமறியப்படும்பொருளு ம்
பிறிவாய்மூன்றாயிருத்தல்பேதமலவோவெனவே (௮௪)

இ-ள்.

அறிவானும்-ஞாதிருவும், நல்லறிவும்-நன்மையாகியஞான மும், அறியப்படும்பொருளும் - அறியப்படுவதாகியஞேய மும், பிறிவாய்-வெவ்வேருய், மூன்ருயிருத்தல் - திரிபுடி யாகவிருக்கின்றது, பேதமலவோவெனவே - (ஒன்றேபொ ருளென்னுமத்துவிதசித்தாந்தத்திற்கு) விரோதமல்லவோ வென்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

சொற்பனத்திற்றனித்தொருவன்ருேற்றம்வேறில்லையங்கே
கற்பனையாம்பொருளறிவுகாண்பவன்போலென்றவரோ
(௮௫)

இ-ள்.

தனித்தொருவன் - தனித்துநித்திரைபண்ணுகின்றவொருவ னது, சொற்பனத்தில்-சொற்பனுவஸ்தையில், தோற்றம்— (தோன்ருகின்றதிரிபுடித்) தோற்றங்கள், அங்கேபோல - அச்சொற்பனுவஸ்தையிற் (சொற்பன திருஷ்டாவுக்கன்னிய மாகவில்லாதன) போல, கற்பனையாம்-பொய்யாகிய, பொ ருள்-ஞேயமும், அறிவு - ஞானமும், காண்பவன் -ஞாதிரு வும், வேறில்லையென்றவரோ-சாக்ஷிசைதன்னியத்துக்கன் னியமாகவில்லையென்று கூறியருளியவரோநீர், (எ-று).

---

கற்பனையாம்பேதங்கள்காணுமற்போம்வகை ‍ ‍ ‍ ‍ யை
விற்பனமாயானறியவிளம்புமெனவேவணங்க ‍ ‍ ‍ ‍ (௮௬)

இ-ள்.

கற்பனையாம்பேதங்கள் - பொய்யாகிய திரிபுடிப்பேதங்கள், காணுமற்போம்வகையை - தோன்ருமற் போகின்றவிதத் தை, விற்பனமாய்-சுருதி, யுத்தி, யனுபவமாக, யானறிய-



அடியேனறியும்பொருட்டு, விளம்புமெனவே - அனுக்கிர கம் பண்ணவேண்டுமென்பதாக, வணங்க - அருச்சுனன் நமஸ்கரித்துவினவ, (எ-று).

---

துரியமாம்யோகத்தாற்றூயமனம்லயமா ‍ ‍ ‍ ‍ ‍ ‍ னு
லரியமூவகைவிகற்பமழியுமென்றுசொன்னவரோ ‍ ‍ ‍ ‍ (௮௭)

இ.ள்.

துரியமாம்-துரியாவத்தையையடைதற்கேதுவாகிய,யோக த்தால்- [(*)லயம், (†) விக்ஷேபம், (‡) கஷாயம் ($) ரசாஸ் வாதமென்னும் நான்கு பிரதிபந்தங்களுமின்றித் தியானிக் கின்ற] நிதித்தியாசனத்தால், தூயமனம் - பரிசுத்தமாகிய சாத்விக மனதும், லயமானுல் - பிரமசொரூபாகாரமாக வொடுங்குமானுல், அரியமூவகைவிகற்பம்-நீங்குதற்கருமை யாயுள்ள (||) திரிபுடிவிகற்பங்கள், அழியுமென்று -தோற்ற மின்றிக்கெடுமென்று, சொன்னவரோ - சொல்லியருளிய வரோ நீர், (எ-று),

(*) தியானநிமித்தம் விடயங்களினின்றுந்திருப்பப்பட்ட மனது தியானத்திற் பிரவருத்தியாது வெகுநாட்பழகிய சுழூத்திப்பழக்கத்தாற் சுழூத்தியிற்செல்வதுலயமாம்.

(†) லயத்துக்குக்காரணமாகிய நித்திராசேட மசிரணம திகபோசனஞ் சரீரசிரமமென்னும்நான்கிற்குறைவறநித்தி னைசெய்தலா னித்திராசேடத்தையும் - முன்புசித்த அன் னமுதலியவை சீரணிக்கும்பரியந்தம்போசனஞ்செய்யாதிரு த்த லற்பபோசனஞ்செய்குதன் முதலியவேதுக்களா லசிர ணத்தையு மதிகபொசனத்தையும்-அலைச்சல் முதலியதொ ழில்களின்றியிருத்தலாற்சரீரசிரமத்தையுய்-நீக்குவித்தலா லேனும் - அல்லது பிராணுயாமத்தாலேனும் - லயத்தினி ன்றுந்திருப்பப்பட்டயனது தினந்தோறும் பழகிய சாக்கிர சமஸ்காரத்தாற் சத்தாதி விடயங்களையும் விடயபோகங் களையும் கருதியவைகளிற்பிரவருத்திப்பதே விக்ஷேபமாம்.

(‡) சத்தமுதலிய போக்கியவிடயங்களின் அசுத்தாதியிலக்கணங்களையு மவைகளையடைதலால் வருந்துக்கங்களையும் - பிரமத்தின் சச்சிதானந்த விலக்கணங்களையுமதனையடைதலால் வரும் பரமசுகத்தையும் சிந்தித்துப்பார்க்குதலாலேனும்-அல்லது சாக்கிரசொற்பனங்கள்சுழுத்தியிலில்லாதனபோல அசத்து ரூபமாகிய போக்கியவிடயங்கள் சத்துரூபமாகிய பிரமத்திலில்லையெனப்பார்க்கின்ற வாததிருட்டியினாலேனும் - அல்லது விடயங்கள் தோணினுஞ்சொற்பனஞ் சுத்திகாரசிதம்போற் பொய்யெனப்பார்க்குமித்தையா திருஷ்டியினாலேனும்-அல்லது நானாவிதபேனதரங்கபுற்புதந்திவலைகளனைத்தையுஞ் சலமயமாகப் பார்க்குதல்போல நானாவிதபேதபோக்கிய வஸ்துக்களாகிய திரிசியங்களனைத்தையு மகண்டேகரசப்பிரமமாகிய தனதுசொரூபமாகவே பார்க்கின்ற தன்மய திருட்டியினாலேனும் - அடிக்கடியுதயமாகின்ற சகலவிக்ஷேபங்களையுஞ் சாக்கிரதையாயிருந்து நாசஞ்செய்து திருப்பப்பட்டமனது பின்னரும்லயவிக்ஷேபங்களிற்செல்லுமாயினதனை நிரோதித்துத்தியானம்பண்ணும்போதம்மனது தீவிரராகத்துவேஷாதிவாசனையினாற் றுக்கங்களின் மூழ்கிச் சமாதியிற்போலே காக்கிரமா யிருத்தலே கஷாயமாம்.

(§) கஷாயத்தை யிதுவேசமாதி யெனப்பிரமிக்காமல் விவேகபுத்தியாற் சூட்சுமமாகப்பார்த்து விக்ஷேபநிவிர்த்திக்குக் கூறியவுபாயங்களா னிவிர்த்தித்துத் தியானஞ்செய்து வருங்காற் சமாதியாரம்பத்திற் சவிகற்பமாகவுதிக்கின்ற ஆனந்தானுபவத்தை யிதுவேபரமானந்தானுபவமென்றவ்வானந்தத்திற்றானே மனது மூழ்கியிருத்தல் ரசாஸ்வாதமாம்.

(வினா)-ரசாஸ்வாதத்தையும் பிரதிபந்தமாகக்கூறியதென்னையெனின்-



(விடை)-ரசாஸ்வாதமென்னும் விகற்பசகிதமாகிய ஆனந்தமானது இதுவே பரமானந்தமென மனதுமூழ்கி மேலான நிருவிகற்பமாகிய ஆனந்தத்தை யடையவிரும்பா திருத்தற்கேதுவாயிருத்தலின் பிரதிபந்தமெனக்கூறியதென்க.

(வினா)-நிருவிகற்பமாகிய பரமானந்தமெங்ஙன மனுபவிக்கக்கூடுமெனில்.

(விடை.)-ரசாஸ்வாதத்திற்றானே நின்றுவிடாமல் விவேகத்தால் நீங்கித் தயிலதாரைபோல நிரந்தரம் நெடுங்காலம் நேயத்தோடு லயமுதலியபிரதிபந்தங்களின்றித்தியானிக்கின்ற தியானாப்பியாச பலத்தினாலு மீஸ்வரகிருபையினாலுந் தியானமுந்தியானிக்கின்ற புருடனுமிழந்து தியானவஸ்துவாகிய பிரமசொரூபமாத்திரமாகச் சேடித்துள்ள நிருவிகற்பசமாதியையடைந்து அதுவும் லயமோகசாயமோவென மயங்கி நிலைபெயர்ந்து விடாமற்றிரமாகநிற்கின்ற சமாதியப்பியாசத்தால் மனதுபரிபூரண பரப்பிரமசொரூபத்திற் பாலிற்கலந்த சலம்போலகண்டேகரசமாகக்கலந்து விசிராந்தியடையிற் சூட்சுமமாகச்சாந்தியடைந்துள்ள அம்மனோவிருத்தியில் நிருவிகற்ப பரமானந்த மாவிற்பவிக்கப்பட்டனுபவிக்கக் கூடுமென்க.

(||) திரிபுடிவிகற்பம் பதினான்கு விதமாம் - இவைகளையறிய விரும்பில் விசாரசாகரம் - ௫-வது தரங்கத்திலும் விசாரசந்திரோதயம் - ௫-வது கலையிலும் - பதார்த்தமஞ்சூசா - ௰௪-வது பதார்த்தவருணனையிலும் பாலபோதம் ௬-வது உபதேசத்திலுங்காண்க.

திரிபுடியென்பது-மூன்றுமோர்காலத்துச் சேர்ந்திருப்பனவாயும் மூன்றிலொன்றில்லாத காலத்து மற்றிரண்டு

மில்லாதனவாயு - முள்ளனவேவையோ அவைகட்குத்திரி
புடியென்று பெயர்-ஞாதிருஞானம் - ஞேயமாகிய மூன்று
மோர்காலத்துச்சேர்ந்திருப்பனவாயும் - மூன்றிலொன்றில்
லாதகாலத்துமற்றிரண்டுமில்லாதனவாயுமிருப்பதையுய்த்
துணர்க.

---

சிறந்திருக்குமான்மாவுஞ்செகமெல்லாநிறைந்திருந் து
மறைந்தெனக்குத்தோன்றாதவகையேதுசொல்லுமென
(௮௮)

இ-ள்.

சிறந்திருக்குமான்மாவும் - (திரிபுடிரகிதமாய்ச்)சிறப்புற்றி
ராநின்ற பரமாத்மாவும், செகமெல்லாம்- பிரபஞ்சமெல்
லாவற்றினும், நிறைந்திருந்தும் - நிறைவுற்றிருந்தும், என
க்கு- அடியேனுக்கு, மறைந்து - மறைவுற்று, தோன்றாத-
விளங்காதிருக்கின்ற, வகையேது - விதம்யாதினால்,சொல்
லுமென - அதனைக்கூறியருள வேண்டுமென்றருச்சுனன்
கேட்க, (எ-று). உம்மையிரண்டனுள் முன்னையது உய
ர்வுசிறப்பு - பின்னையது - ஆக்கம்.

---

சத்துச்சித்தானந்தந்தான்மூன்றுமதனுட னே
யொத்துற்றுநாமவுருவஞ்சகமாகி
(௮௯)

இ-ள்.

சத்துச்சித்தானந்தமூன்றும் - அஸ்திபாதிப்பிரியமென்னு
மூன்றிலக்கணங்களும்(பொருந்திய), அதனுடனே - அப்
பிரமத்துடனே, நாமவுருவம் - நாமரூபமாகிய விரண்டும்,
ஒத்துற்று - சேர்ந்து - சகமாகி - பிரபஞ்சமாகி, (எ-று).
தான் - அசை.

---

இருக்கையினிற்றோன்றாதிவைமூன்றும்பிரமமெ ன
மரிக்கில்வரும்பின்னிரண்டுமரிசகமென்றுரைத்தவரோ
(௯௰)



இ-ள்.

இருக்கையினில்-இருக்கின்றபடியால், தோன்றாது - (ஆத்
மா). விளங்கமாட்டாது, இவைமூன்றும் (சச்சிதானந்தமா
கிய) இவைகள்மூன்றும், பிரமமென - பிரமவிலக்கணமெ
னவும், பின்னிரண்டும் - பிற்கூறிய நாமரூபமாகியவிரண்
டும், மரிசகமென்று - கெட்டுப்போகாநின்றபிரபஞ்சவிலக்
கணமெனவும்,ஸ்மரிக்கில்-சிந்திக்கில்,வரும்-(உனக்குஆன்
மாவிளங்கும்படிவரும் - என்றுரைத்தவரோ - என்றுகூ
றியருளியவரோநீர், (எ-று).

---

அறிந்துகொள்ஞானத்தாலேயான்மாவையென்றுரைத்திர்
சிறந்தொளிருமான்மாவுந்திரிசியமாமோவெனவே (௯௧)

இ-ள்.

ஆன்மாவை - ஆத்மசொரூபத்தை, ஞானத்தாலே - தத்து
வஞானத்தால், அறிந்துகொள்ளென்றுரைத்தீர் - அறிந்து
கொள்வாயாகவென்றுகூறியருளினீர், சிறந்து - சச்சிதான
ந்தமயமாகச்சிறப்புற்று, ஒளிருமான்மாவும் - பிரகாசிக்கப்
பட்ட (1) ஆத்மாவும், திரிசியமாமோவெனவே - (பிரபஞ்
சத்தைப்போல) விஷயமாகுமோ வென் றருச்சுனன் கே
ட்க, (எ-று).

(1) ஆன்மாவுமென்ற எச்சவும்மையால் பிரபஞ்சத்தை
ப்போலெனவிரிக்கப்பட்டது, இதனை - உயர்வு - சிறப்பாக
ஆக்கினும்அமையும்.

---

முந்தியஞானத்தாலேமுதிருமஞ்ஞானந்துரக்கி ல்
சிந்தையிலான்மாச்சுயமாய்த்திகழுமென்றுசொன்னவரோ
(௯௨)

இ ள்.

முந்தியஞானத்தாலே - முதன்மையாயுள்ளதத்துவஞானத்தால், முதிரும்-அதிகரித்துள்ள, அஞ்ஞானந்துரக்கில் - அஞ்ஞானத்தைநிவிர்த்திக்கில், சிந்தையில் - சித்தத்தின்கண், ஆன்மா - ஆத்மாவானது, சுயமாய்த்திகழுமென்று- தன்மயமாகவிளங்குமென்று, சொன்னவரோ- கூறியருளியவரோநீர், (எ-று).

---

இனியமுத்திச்சுகமிருப்பதெப்படியென்றேவின வ
வனுபவத்திலறிவிடயானந்தம்போலென்றவரோ, (கூரு)

இ-ள்.

இனியமுத்திச்சுகமிருப்பது - இனிமையாயுள்ள மோக்ஷசுகமிருக்கின்றது,எப்படியென்றேவின வ-எதுபோலவென்றருச்சுனன்கேட்க, விடயானந்தம்போல்-விஷயசுகத்தை (யனுபவித்தறிவது) போல, * அனுபவத்திலறி -(மோக்ஷசுகத்தையும்-) உனதுசுவானுபவத்திலறிந்து கொள்வாயாக - என்றவரோ - என்றுகூறியருளியவரோநீர்,(எ-று).

(*) சருக்கரையின் சுவையாதெனுங் கடாவிற்குத் தித்திப்பென விடைகூறுங் காலையிற் றித்திப்பெங்ஙனமிருக்குமென வினவியவர்கட்கு அனுபவித்தறிவாயெனலேயன்றி வாக்கினுலிங்ஙன மிருக்குமென்றுரைத்தற்குக் கூடாதது போல மோக்ஷசுகமு மனுபவித்தறியக் கூடியதேயன்றி வாக்கினு லிங்ஙனமிருக்குமென் றுவமித்துரைத்தற்குக் கூடாததென்பதுதோன்ற - அனுபவத்திலறி விடயானந்தம்போலென்றார்.

---

மனலயம்வந்தவரலதுமற்றிலரோமுத்தரெ னச்
சனகனைப்போற்சீவன்முத்தர்தாமுமுளரென்றவ ரோ
(கூச)



இ ள்.

மனலயம் வந்தவரலது - மனோநாசம்வந்தவர்களேமுத்தர்களல்லாமல், மற்றிலரொ முத்தரென-(மனோநாசமின்றிய) மற்றயர்கள் சீவன் முத்தர்களல்லரோ வென்றருச்சுனன் கேட்க, சனகனைப்போல்-(விவகாரதிசையிலிராநின்ற)சனகராசனைப்போல, சீவன்முத்தர் தாமும்-(மனோலயமின்றிய பிரமவித்துக்களாகிய) சீவன்முத்தர்களும், உளரென்றவரோ-இருக்கிறார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று), தாம் = சாரியை,

---

சீவன்முத்தியடைந்தோர்கள்செயலுமவர்தங்குண மு
நாவுரைக்கும்வாசகமுநானறியச்சொல்லுமென (கூரு)

இ ள்.

சீவன் முத்தியடைந்தோர்கள் - சிவத்துவம் விடுபட்டிராநின்ற முத்தியையடைந்தவர்களினது, செயலும்-ஒழுக்கமும், அவர்தங்குணமும் - அவர்களினது குணங்களும், நாவுரைக்கும் வாசகமும் = அவர்கள்நாவினால்வசனிக்கும் வசனங்களும், நானறியச் சொல்லுமென = அடியேனறியும்படியாகக் கூறியருள வேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ=று).

---

வருங்கருவுபிறப்பினோடுவளர்தல்பருத்தல்குறை த
லோருங்கலுமெய்கென்றதனையொருத்திருப்பாரென்ற
[வரோ] (கூசா)

இ ள்.

வருங்கருவு=(கன்மத்துக்குத்தக்கதாக) வராநின்ற கருப்பமாதலும், பிறப்பினோடு (பூமியிற்) பிறத்தலோடு, வளர்தல்=வளர்தலும், பருத்தல் = பருமனாதலும், குறைதல் =

மெலிதலும், ஒருங்கலும் = நாசமடைதலுமாகிய சட்பா
விகாரங்கள், மெய்யகென்று = சரீரத்துக்கேயென்றறிந்து,
அதனை = அச்சரீத்தினை, ஒறுத்திருப்பாரென்றவரோ = அபி
மானியாது வேறுப்புற்றிருப்பார்களென்று கூறியருளிய
வரோநீர், (எ-று).

---

பார்ப்பதுவுங்கேட்பதுவும்பகர்வதுவுஞ்செல்வது வு
மேர்ப்பதுவுங்கரணதன்மமெனப்புகல்வாரென்றவரோ
(கூஎ)

இ ள்.

பார்ப்பதுவும் = உருவங்களைப்பார்க்குதலும், கேட்பதுவும்-
சத்தங்களைக்கேட்குதலும், பகர்வதுவும் = வசனிக்குதலும்,
செல்வதுவுங் = கமனுகமனஞ்செய்குதலும், ஏர்ப்பதுவும் =
வாங்குதல் கொடுத்தலும், கரணதன்மமென - கரணங்
களினதுதருமமென்பதாக, (*)புகல்வாரென்றவரோ = வச
னிப்பார்களென்று கூறியருளியவரோ நீர், (எ = று).
வாசகமுறைத்தல்.

(1) தவிர்ந்தாரெனவும் பாடமுளது - அங்ஙனமாயின்
புகல்வாரென்றதையே பாடமாகக்கொண்டு பொருள்
கூறியதென்னையெனின் - பழமையாயுள்ள சிலபிரதிகளிற்
புகல்வாரென்றிருந்தமையினாலும் - கூடு-வது- செய்யுளில்
அருச்சுனன் பகவானைநோக்கிச் சீவன் முத்தர்கள் நாவு
ரைக்கும் வாசகமும் நானறியச்சொல்லுமென்ற கடாவிற்
குப் புகல்வாரெனற் விடைபொருத்தமாயமைதலினாலும்-
சாஸ்திரவிரோதமின்மையினாலும்-புகல்வாரென்றதையே
கொண்டு பொருள் கூறினும்-தவிர்ந்தாரென்றதையே கொ
ள்ளில் - அவைகளிலுள்ள அபிமானங்கணிங்கியிருப்பார்
களெனப்பொருள்படும் அங்ஙனமாயின் அருச்சுனன்வின
வியகடாவிற்குப்-பகவான் விடை கூறுந்து தவிர்ந்தா
ரெனல்வரும்.



பசிதாகமுயிர்க்கெனவேபயந்துக்கஞ்சுகங்காம ம்
வசிகோபமதிக்கெனவேமகிழ்ந்திருப்பாரென்றவரோ
(கூஅ)

இ ள்.

பசிதாகமுயிர்க்கெனவே- பசியும் - தாகமும் பிராணனுக்
கெனவும், பயந்துக்கஞ் சுகங்காமம்—பயமுந்துக்கமும் சுக
மும் காமமும், வசிகோபம்-குற்றம்பொருந்தியகோபமும்,
மதிக்கெனவே-புத்திக்கெனவும், (ஆன்மாவுக்கில்லையென
வுமறிந்து)மகிழ்ந்திருப்பாரென்றவரோ-சதாமகிழ்ச்சியோ
டிருப்பார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று) குண
முறைத்தல்.

---

வீடுந்தாரமுமுறவுமேவியென்றுமிருந்தா லு
நீடுந்தாமரையிலைநீர்நிகரொப்பாரென்றவரோ (கூகூ)

இ-ள்.

வீடும்-கிரகத்தோடும், தாரமும் = மனையாளோடும், உறவும்-
சுற்றத்தாரோடும், என்றும்-சதாகாலமும், மேவியிருந்தா
லும் - கூடியிருந்தாலும், நீடும்-செழித்துள்ள, தாமரை
யிலைநீர் நிகரொப்பார்-கமலபத்திரோதகம்போலப் (பொ
ருந்தியும் பொருந்தா) திருப்பார்கள், என்றவரோ-என்று
கூறியருளியவரோ நீர், (எ-று). செயலுரைத்தல்-நீடுதல்-
செழித்தல்.

---

பற்றிடுங்காயமுந்தானும்பன்னுளொன்றாயினும் பி
னுற்றபுளியம்பழமுமோடுமொப்பாரென்றவரோ (௱)

இ-ள்.

பற்றிடுங்காயமும்-(சடமாகப்) பொருந்திய சரீரமும், தா
னும்-ஆத்மாவாகியதானும், பன்னுள் - அனேககோடிகா

லம், ஒன்றுயிடினும் - ஏகமாகக்கூடியிருக்கினும், உற்ற பின்-ஞானமடைந்தபின்னர், புளியம்பழமும்-சிந்தகக்கனியும், ஓடுமொப்பார்-அதன் ஓடும் போற்பற்றின்றியிருப்பார்கள், என்றவரோ - என்றுகூறியருளியவரோநீர், (எ-று), செயலுரைத்தல்.

---

கூறுமுலகியற்கையுடன் கூடினுமெய்ஞ்ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப்பூச்சியும்போற்றிரிவார்காணென்றவரோ (௱க)

இ-ள்.

மெஞ்ஞானம்வந்தோர் - உண்மைஞானமுதயமாகியசீவன்முத்தர்கள், கூறும் - அசுத்தாதியிலக்கணங்களுடையதெனச்சொல்லப்படுகின்ற, உலகியற்கையுடன்-உலகசுபாவத்தோடு, கூடினும்-பொருந்தியிருக்கினும், சேறும்பிள்ளைப்பூச்சியும்போல் - சேற்றையு (மதிற்சஞ்சரிக்கின்றபிள்ளைப்பூச்சியையும்போல, திரிவார்காணென்றவரோ- (1) (அசங்கமாகவே),சஞ்சரித்துக்கொண்டிருப்பார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று). செயலுரைத்தல்.

(1) சங்கம், கலத்தல்-அசங்கம்கலத்தலின்மை ஆன்மாவேயசங்கமாயுள்ளதென்னும் விசாரமறியவிரும்பில்எமதுகருணைமதயானையென்னும் பிரமானந்தசாகர சொரூபராகிய கோயிலூர்ச்சிதம்பரசுவாமிகள் செய்தருளிய இலக்கணவிருத்தியிற்காண்க.

---

தயிடுகடைந்தவெண்ணெய்தான் மோரிற்கிடப்பது [போல்]
மதியோடுகூடினும்பின்மயங்கார்காணென்றவரோ (கூஉ)



இ-ள்.

ததியூடுகடைந்தவெண்ணெய்-தயிரின்கட்கடைதலாலுண்டாகிய நவநீதமானது, மோரிற் கிடப்பதுபோல்-மோரினிடத்துச்சம்பந்தமின்றிக்கிடத்தல்போல, பின்-ஞானமடைந்தபின்னர், மதியோடுகூடினும்-புத்தியோடுசேர்ந்திருக்கினும், மயங்கார்-மயக்க மடையார்கள், காணென்றவரோ-நீயறிவாயாகவென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

---

அருச்சுனன்றன்பொருட்டாகவனைவருக்குஞானம்வரப்
பொருந்தியதேசிகவடிவாம்புண்ணியரேகண்வளரீர் (கூ௩)

இ-ள்.

அருச்சுனன் றன்பொருட்டாக - அருச்சுனனிமித்தமாக, அனைவருக்கும்-சகலமுமூட்சுக்களுக்கும், ஞானம்வர-ஞானமுதயமாகும்படி, பொருந்திய - அமைந்தருளிய, தேசிகவடிவாம் குருவடிவமாகிய, புண்ணியரேகண்வளரீர்-புண்ணியமூர்த்தியே, நித்திரைசெய்தருளும்,(எ-று).

---

ஆயர்குலமாதரளவிலோரைப்புணர்ந்து
தூயபதினாறுயிரவருடன்றோய்ந்திருந்தும் (௱௪)

இ-ள்.

ஆயர்குலமாதர் - யாதவவம்சஸ்திரீகள், அளவிலோரைப்புணர்ந்தும் - அளவில்லாதவர்களைச்சேர்ந்தும், தூய-பரிசுத்தமாகிய, பதினாறுயிரவருடன் - பதினாறுயிரமிராசஸ்திரீகளோடு, தே[ ]யந்திருந்தும் - கூடியிருந்தும், (எ-று).

---

பரமமுனிவர்முன்னேபரீச்சித்தைத்தீண்டியவ்
பிரமசரியஞ்செலுத்தும்பெரொளியேகண்வளரீர் (௱௫)

இ-ள்.

பரமமுனிவர்முன்னே-மேலானமுனீஸ்வரர்கள்முன்பாக, பரிச்சித்தைத்தீண்டி -பரிச்சித்தரசனைப்பரிசித்து, அன்று-அக்காலத்தில், பிரமசரியஞ்செலுத்தும் - பிரமசரியத்தன்மையைநடாத்திய,பேரொளியே - பெருமைபொருந்தியசைதன்னியமே, கண்வளரீர் - நித்திரைசெய்தருளும் (எ-று)

---

### வெண்பா.

ஆதிமூலம்விசயற்காதிமறையின்பொரு ளை
யோதியுணர்த்தியவிவ்வுண்மையினைக் காதலுற்றுக்
கற்றோருங்கேட்டோருங்காசினியில்வாழ்ந்துமுத் தி
பெற்றோர்கண்முத்தர்பெறும்பேறு ... ... ...(எகூ)

இ-ள்.

ஆதிமூலம் - யாவுக்குமுதன்மையாயுங்காரணமாயுமுள்ள பகவான், விசயற்கு - அருச்சுனனுக்கு, ஆதிமறையின் பொருளை - முதன்மையாயுள்ளவேதார்த்தத்தை, ஓதியுணர்த்திய - உபதேசமூலமாகத்தெரிவித்துள்ள, இவ்வுண்மையினை -(எதார்த்தபோதகமாகியகீதாசாரமென்னும்)இம்மெய்நூலை, காதலுற்று-பிரியமுற்று, கற்றோரும் - படித்தவர்களும்,கேட்டோரும்-குருமுகமாகச்சிரவணஞ்செய்தவர்களும், காசினியில் வாழ்ந்து-உலகத்திற் சுகவாழ்வையுற்று, முத்தர்பெறும்பேறு-சிவன் முத்தர்களடையும்பிரயோசனமாகிய, முத்தி-விதேககைவல்லியமென்னு மோக்ஷத்தை, பெற்றோர்கள்-அடைந்தவர்களேயாம், (எ-று).

முற்றிற்று.

உ

சிவமயம்.

# சிதம்பரதேசிகர்பதிகம்.

இஃது.

பிரமானந்தசாகர சொரூபராகிய, ஸ்ரீகோயிலூர்ச்சிதம்பர சுவாமிகள் மாணாக்கராயும்-திருவாரூரைச்சேர்ந்தவன் மீகபுரத்திலெழுந்தருளிய ஸ்ரீ குருதக்ஷிணாமூர்த்தி சுவாமிகளாதீனத்திற்குரியவராயுமுள்ள மதுரைச்சிவானந்த சுவாமிகளாலியற்றப்பட்டது.

---

### வெண்பா.

சீரார்கழனிச்சிதம்பரமாதேசிகன் மே
லேரார்பதிகமியம்புதற்கு-நேர்துணையா ம்
வஞ்சகக்கயமுகனைமாறுபடவென்றவைந் து
கஞ்சக்கரக்கற்பக ... ... ... ம்

---

### எழுசீர்க்கழிநெடிலாசிரியம்.

நீரின்மேலெழுது மெழுத்தினுக்கிடமை நேர்மையாய் வடி
க்குநர்போலப், பாரின்மேலழியுமுடம்பினை வளர்க்கப் பல
பொருட்டேடி நொந்தலையுங், காரிருணிகர்த்தமனத்தினே
னொற்குக்கதிதரலெந்தநாளுரையாய், சீரருட்கடலே கழ (க)
ரியம் பதிவாழ்சிதம்பரதேசி கோத்தமனே,

உய்யநூலுரைக்குஞ் சாதனவகையிலொன்றையு மடைந்
திலேன் மடவார், மையன்மேற்கொள்ளு நெஞ்சினே னிச்
சைமாய்த்த நின்னடியர்போற்பேசும், பொய்யனேன் றனை
யுங்கைவிடேல் விடினுன்புகழினுக்கழகின்றுங் கருணை,
செய்யவேவேண்டுங் கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோ
த்தமனே, ... ... ... ... ... (௨)

---

தந்தைதாய்புதல்வர் தம்பிழைநோக்கித்தணந்திடல்வழக்
கன்றுமதுபோ, லெந்தைநீயெனது பெரும்பிழைநோக்கி
யிகழ்ந்து கைவிட்டிடேல் விடின்மு, னிந்தையில்கருணை
நிதியெனநின்னைநிகழ்த்தியமறைகள் பொய்த்திடுமால், சிந்
தனைக்கரியாய் கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோத்த
மனே ... ... ... ... ... ...(௩)

---

கனிகையைமணந்துபினமவட்கின் பங்கலவியிற்றந்திடார்
போல, வெனைநினதடியர்குழுவிடையொருவனெனமுனஞ்
சேர்த்தனைபின்னர், தனையெனக்கருளியழிவுறுவின் பந்தந்
திலையென் செய்வேனந்தோ, தினையளவெனினு மீய்ந்த
ருள் கழனிச்சிதம்பரதேசி கோத்தமனே ... (௪)

---

புகழினைவிரும்பித்துறவர் போனடிக்கும் பொய்மையேனி
ன்னன்பர்குழுவின், மகிழ்வுறச்சேர்ந்தும் நன்னடைபயிலா
மடமையேனென் செய்வேன்பவமா, மகழிடைமூழ்கியயர்
வுறுகின்றேனஞ்சலென் றெனக்கருள்புரிவாய்,திகழ்மணிக்
குன்றே கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோத்தமனே(௫)

---

மடமையாலுழலும் புன்மையேனெனையும்வாழ்விப்பதுன்
பரமன்றோ, படமதிற்றோன்று மோவியவினங்கள் படத்
திலுக்கிதரமில்லதுபோற், சடமதாமுடல முதற்பிரபஞ்
சந்தனக்கு வேறிலையெனவாய்ந்து, திடமுறத் தெளிந்த
துறவர் வாழ்கழனிச் சிதம்பரதேசி கோத்தமனே (௬)



பத்தர்கட்கருளும் பேரருட்பிழம்பேபாவியேன்மனத்துறு
மகந்தைப், பித்தறக்கருணைசெய்திடினின் மேற்பிழைசொல்
வாருலகிலுண்டென்றோ, வித்தலத்துனையே கதியென
விரும்புமெனக்கருள் செய்திலைஞான, சித்தர்கள் பரவுங்
கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோத்தமனே ...(௭)

---

இடம்பொருளேவலெனும் பெருஞ்சுமையை யெடுத்தலே
சுகமெனக்கருதி, மடம் புகுந்துழலச் செயுமடமதனை
மாய்த்துமெய்ச்சிவமதேயிடமா, யிடாறக்கொண்டுபின்ன
மற்றுளிரவெந்தைநீயருள்செய்வாய்செய்வாய், திடமனத்
தடியர் பரவவாழ்கழனிச் சிதம்பரதேசிகோத்தமனே (௮)

---

சுத்திகார சிதங்கானனீர்க்கயிற்றிற்றோன்றரவெனத்திகழு
லகைச், சத்தியமெனயான் மடமையாற் கருதித்தளர்வுறு
வண்ணநீயருள்வாய், அத்தனேயரசேயன்னையே யமுதே
யப்பனே யொப்பிலாமணியே, சித்தனேசெல்வக்கழனியம்
பதிவாழ் சிதம்பரதேசிகோத்தமனே. ... ... (௯)

---

பருதியையடைந்தும் பனிக்குளிர்நீங்காப் பான்மைபோற்
சுகவடிவெனவே,சுருதிசொல்நின்னையடைந்துமியானென்
றுயரநீங்கிலேனந்தோ,கருதியதளிக்குங் கற்பகரா
ஜகட்கரோன்னிறையொடு மமர்ந்த, திருநெலையுமையாள்
காப்புறுங்கழனிச் சிதம்பரதேசிகோத்தமனே. ... (௰)

முற்றிற்று.

# சிதம்பரதேசிகர்தோத்திரம்.

எத்தனையோசனன மெடுத்தந்தோவந்தோ வேழையேன் படுந்துயருக்கிலக்குமுண்டோ-வத்தனையுந் தெரிந்திருந்து மிரங்குகில்லாயாகிலினி யெனக்கருள் வாராரோகிட்டாப் புத்த முதேயருட்பிழம்பே கருணைவாழ்வே பூரணானந்த மயப்பொலிவேஞான - சித்தரெலாம் பரவவளர்கழனிவாழு ஞ்சிதம்பர தேசிகப்பிரமதேவதேவே. ... (க)

---

அய்யநின்னடியர் தமிலொருவன் யானுமளவில் பவப் பிணிப்பசியா லந்தோவந்தோ - நையமற்றையடியரெலாம் பிரமானந்த நறுமமிர்துண் டகங்களித்துவாழ்தலென்னை- மையல்செயும் வினைப்பயனமெனிலோ நின்னைவல்லகருண நிதியென்றுரைத்தலென்னே - செய்யமறை முழங்குதிருக் கழனிவாழுஞ் சிதம்பரதேசிகப்பிரம தேவதேவே. (உ)

---

பித்தர்செயும் பிழைநோக்கார் பெரியோராங்கு பேத மையாணவப்பேய்தான் குடியாக்கொண்ட - மத்தமதி யினன்யான் செய்பிழை நீநோக்கல் வழக்கன்றே மருந்தி னியல்பருந்துவோர்க-ளத்தகையரெனினுமவர் பிணியை நீக்கலெனவெனநுபவத்தையு நீ தவிர்க்காதென்னே-சித்தி யெலாம்விளங்கு திருக்கழனிவாழுஞ் சிதம்பரதேசிகப்பிரம தேவதேவே. ... ... ... ... ... (ங)

---



# நெஞ்சிற்கறிவுறுத்தல்.

பித்தனைத்துந்தவிர்த்தாள்பவனென்னப்பெருமறை க
ளத்தனைநன்மொழிகூறினுங்கேட்டிலையேழை நெஞ்சே
கத்தனைமோகவிருட்குமெய்ஞ்ஞானக்கதிரெனை ன்
சித்தனைநந்தஞ்சிதம்பரதேசிகதேவனையே (க)

---

வீணிலைநந்தஞ்சிதம்பரதேவனைவேண்டலென் று
காணிலைகண்டுகளித்திலையன்னோன்கழல்சிரத்தி ற்
பூணிலைபூண்ட.வர்போனடிக்கின்றனைபொய்மைநெஞ்சே
நாணிலையென்செய்வையந்தோமரணம்நணுகிடினே (உ)

---

மரணத்தொடுபவமற்றார்களென்னுமறைமொழியை த்
திரணத்தளவெனினுமதித்தாயிலைதீமைநெஞ் சே
கரணத்தினந்தஞ்சிதம்பரதேவன்கமலமென்பூ ஞ்
சரணத்தையன்பொடுதொங்கிப்புகழ்ந்திடுஞ்சாந்தர்களே
(ங)

---

சற்குருதுணை.

## பிழைத்திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨ | ௰௯ | பிரகாசம | ... | பிரகாசம் |
| ௫ | ௨௰ | சிகாா | ... | சிகரா |
| ௮ | ௰௬ | வார்க்க | ... | வர்க்க |
| ,, | ௰௯ | கெதி | ... | கெடுதி |
| ௩௫ | ௨௧ | ஆயிராா | ... | ஆயிரநா |
| ௩௭ | ௰ | பிரவிீன | ... | பிறவிீன |
| ௪௨ | ௮ | பயன்ய | ... | பயன்ப |
| ௪௮ | ௰௩ | திருட்ட | ... | திருட்டா |
| ௫௫ | ௧ | இருக்ரு | ... | இருக்கு |

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீதத்துவராயசுவாமிகள் அருளிச்செய்த

# சசிவன்னபோதம்.

இஃது

ஸ்ரீ கோயிலூர்

## பொன்னம்பலசுவாமிகள்

முன்னிலையிற்

பரிசோதிக்கப்பட்டப்

பிரதிக்கிணங்க,




கொ - லோகநாதமுதலியாரவர்களால்

தமது

மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

சென்னை.

இதன்விலை அணா - ௪.

உ

சிவமயம்.

## மோகவதைப்பரணியின்கண்ணுள்ள

# சசிவன்னபோதம்.

---

### கடவுள்வணக்கம்.

மதிபருதியெரிநீர்கால்
வானவனியியமானன்வடிவாயெல்லா
வதிபதியாயனைத்துமா
யல்லாதவறிவுருவையகத்துள்வைப்பாம். (க)

சொல்லாற்றம்மதிவிரகாற்
றாயதிதுதீயதிதுவென்னுமாக்க
ளெல்லார்க்குமதுவதுவா
யிறையிருக்கும்படியேயாயிருக்கவென்றே. (உ)

---

* அலகையச்சமறவகவான்களு
முலகின்முத்திபெறும்பரிசோதுவாம். (க)

புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே. (உ)

---

* அலகை=விளி.

எழிலாருஞானிபுகழென்னைகூற
வுயர்வீடிவன்சொல்வழிசெய்
தொழிளாளர்சேர்கையதுகேளுமுன்னை
யிதிகாசமொன்றுசொலவே. (௩)

தந்தாபமற்றபரனேவல்செய்த
வவனுற்றபேறுதனைமுன்
செந்தாமரைக்கண்முதல்வற்கெமண்ண
றிருவாய்மலர்ந்ததிதுவே. (௪)

உவமிப்பின்ஞானிவிழிபட்டுமுன்னை
வினைவிட்டுமுத்தியுலகிற்
றவமற்றவெய்யவினையேபுரிந்த
சசிவன்னனெய்துகதையே. (௫)

வேறு.

ஏமம்புகுவாருளபாதகரா
மியாவர்க்குளுமிக்கவனாகுமிவ
னாமம்புகல்வார்குலமும்மெரிவாய்
நரகம்புகுமாறுநடந்தனனே. (௬)

மலமேவியதீவினையின்வலியான்
மகிழும்பர்பதத்திலிருந்தவிவன்
குலமேவியதென்புலவாணர்களுங்
கொடிதாநரகங்குடியேறினரே. (௭)

மிகமேவியபுண்ணியபாவமெனும்
வினையின்பயன்மேலொருகாலமுறு
திகமேவருமென்பதனாலுளநோ
யெல்லாமிவனைச்செறவெய்தினவே. (௮)



தன்புத்திரனேயம்விடாமையினாற்
றவறுற்றவிவற்பெறுதந்தையுளந்
துன்புற்றினியென்னைகொலோபுதல்வன்
றுயர்தீர்வகையென்றுசுழன்றனனே. (௯)

ஒன்றாலும்வினைத்துயர்துய்ப்பதலா
லொழிவிக்குமுபாயமுனக்கிலதே
யென்றாலுமறிந்தவனன்புவிடா
திவனைக்கொடுழன்றனனெங்கணுமே. (௧௦)

ஒருமாதவன்மற்றிவன்வேதனைகண்
டொழிவற்றுளவொன்றையுளத்துணரும்
பரமாகியஞானிகள்கண்ணுறலே
பரமா அவிழ்தமென்றுபகர்ந்தனனே. (௧௧)

தானந்தமிலாததனைத்தருவான்
சத்தீச்சுரமென்னுமிடந்தனில்வாழ்
மாநந்திபராயணரென்பவர்நின்
மைந்தற்குறுநோய்க்குமருந்தெனவே. (௧௨)

முடியாவுபதேசமிதென்றவனு
முனிவன்பதமெய்திமொழிந்தனனிக்
கொடியான்வெருவாதுகுயிற்றியநோய்
கூறற்கரிதாயகொடுந்தொழிலே. (௧௩)

ஈங்குன்றிருமுன்பகரும்படியோ
விவனெய்தியதீவினையென்னவெலா
நீங்கும்படிதன்னனுபூதியினா
னிகழும்விழிவைத்தனனின்மலனே. (௧௪)

கணியாதபவக்கடுவானதிருக்
கண்வைத்தலும்விட்டனகாதுகடும்
பிணியாவையுநல்லபிதாவிறைதாள்
பேணிப்பணியென்றுபெயர்ந்தனனே. (கரு)

இடனேமுதலாகவுவந்திறையோ
னேவும்பணிசெய்திவனுஞ்சிலநா
ளுடனேயிவனேதிருமேனிதனக்
குரியானெனவுற்றனனும்பனேடே. (கசு)

நன்றாய்முனிதாள்வழிபாடதனு
ஞறுவிதமானபிறப்பினைவிட்
டொன்றாகியவீடுணருத்தமர்கட்
குளசாதனநாலுமுதித்தனவே. (கஎ)

முனிவன்றிருமுன்புளதன்குறைதான்
மொழிவன்சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப்
பணிவந்திருகண்கள்பதங்களிலே
பலகால்வலம்வந்துபணிந்தனனே. (கஅ)

அருளேவடிவாகியமாமுனிதா
னறியாதவர்போலவழுங்கலுறும்
பொருளேதெனமைந்தனடுங்கினனிப்
பொல்லாதபவப்புணரிக்கெனவே. (ககூ)

வெருவும்பிறவிக்கடல்வித்தரமுன்
வேதாகமகீதைவிளம்புமதைக்
குருவுந்தனதன்பன்மனத்தளவிற்
கொளுமாறுதொகுத்திவைகூறிடுமே. (உ0)



மரணபவங்களானபுனலையுடையது
மதியைவிழுங்குகாமவரவுபெரியது
கரணவொழுங்கறுதுவிடயவிரைதுகர் (உக)
கணமொடியங்குமீனமிகவுமுகள்வதே.

பெருமிதமென்றுகூறுபெருமையுடையது
பிணிகளெனுங்கெடாதபுலவுகமழ்வது
வருமிடரின்பமானதிரைகள்பொருவது (உஉ)
மனமெனும்வஞ்சராஜமகரமுறைவதே.

அளவிலகந்தையாமையபரிமிதமுள
தவாவுநிறைந்தவாழமறியவரியது
களவுநெருங்குபாருமலையுமுடையது (உங)
கலகவிடங்கண்மேவுகிருமிநெளிவதே.

துகளெனுநன்கலாதநுரைகடருவது
துறவெனுமின்பமானகரையைவிடவகன்
மகளிரெனுந்தவாதவலியசுழியது (உச)
மறலியுமஞ்சுகோபவடவையெரிவதே.

வெருவருகின்றபோகமுதலையுடையது
விவிதமனந்தமானதுறையுமறிபவ
ரொருவர்கடந்துபோகவிரகிலெழுபவ (உரு)
வுததிவிளம்பயாவருலகிலறிஞரே.

பொறிவழிசென்றுமீளுமவலமதிகொடு
பொருசமயங்களாறுமறியவிழுமதி
லறிவழிவொன்றிலாதபொருளதெனவுள (உசு)
வநுபவவங்கமேறுமறிஞரகல்வரே.

புணரிகடந்துபோகவிரகிலெனமொழி
பொழுதுபுலம்பியாவிபுதல்வனிறுமுன
முணர்வெனும்வங்கமேறுமறிஞரகல்வரென்
றுரையைவழங்கிநாதனுவகையருளவே. (உஎ)

வே று.

வாழியெனவிறைவனடிதொழுதுவருபவமா
மாழியினையகலுமறிவருளுகெனவவரே. (உஅ)

பரவறிவுமபரவறிவெனவுமிருபரிசாத்
திரவறிவையறியுமவர்மொழிவர்தெளிவுறவே. (உகூ)

அபரவுணர்வருமறைகண்முதலகிலகலையு
முபரமமதறவுதவுமுணர்வுபரவுணர்வே. (௩0)

ஆகமவிதங்களறிவாரபரமறிவார்
யோகமொடுறங்குமவரேபரமுணர்ந்தோர். (௩௧)

புராணமிதிகாசமெவையும்பொருளனைத்தின்
பிராணனறியாதுளவிடத்திவைபிதற்றே. (௩௨)

இயலறிவதிசையறிவதினமறிவதுளவா
மயலறிவதறிவதலவறிவறிவதறிவே. (௩௩)

நவிலுகலையறுபத்துநாலுமறிவாரும்
பவலயமதறுசுத்தபரமமறியாரே. (௩௪)

ஆகவறிவாளரறிவாரிவையனைத்து
மேகவறிவாளரிவையாவுமறியாரே. (௩௫)

ஐயறிவறிந்தவையடங்கினவரேனு
மெய்யறிவிலாதவர்கள்விடதுபெறுரே. (௩௬)



மெய்ம்மையறிவல்லதமில்வேறறிவதெல்லாந்
தம்மையறியும்மறிவதேயறிவுதானே. (௩௭)

பூசனையுமதுசகலபொருளுமறிதமையு
மீசனையும்வேறதறவறிவதறிவெனவே. (௩௮)

தானெனுமுடம்பதுதனைத்தவிரவேறு
யானெனுமருத்தமுளவோவருளுகெனவே. (௩௯)

வே று.

எனதாடைபொன்பூமகன்றையல்பாய்மா
விபங்கண்முகங்கால்கைமெய்யென்னவென்றுந்
தனதாயுரைப்பான்வகுத்திந்தவூனைத்
தானென்றயர்த்துஞ்சொலத்தக்கதன்றே. (௪0)

தாளாகவூராழியார்வென்னில்வீணு
தண்டாகவன்மார்புதட்டாகமொட்டா
நாளாமலர்ச்சென்னிகூந்தற்கொடித்தேர்
நாணுளுமூர்வானில்வேருகாடே. (௪௧)

கடக்குஞ்சரம்பண்ணியுண்ணின்றொருத்தன்
கைபாதகன்னங்கண்மெய்போலியக்குங்
கிடக்கும்நடத்தாவிடத்திவ்வுடம்புங்
கிடக்கும்மொருத்தன்னடத்தாவிடத்தே. (௪௨)

ஒருகூறுமலமாகுமொருகூறுடம்பாகு
மொருகூறுமனமாகுமுண்டற்றவன்ன
மிருகூறுநீயாகிஞெருகூறுநீயா
மிழிக்கும்மலஞ்சோரிடப்பட்டவுடலே. (௪௩)

ே ஜிாடா அ—

கிளராதரத்துண்ணுமன்னஞ்சுடக்கை
கிட்டப்பொருதேயிருந்தார்முனிந்தார்
தளராதுறுப்பொன்றுமுயிர்போகவன்றே
தழற்பள்ளிமீதேதுயின்றூர்சகித்தே. (௪௪)

நிழற்பாவைகண்ணாடியிற்பாவைகைகா
ணிமிர்க்கும்முடக்குமிவன்செய்யுமெல்லாந்
தொழிற்பாலவாமற்றிவ்வுடலஞ்செய்தொழிலுஞ்
சுடர்ஞானவடிவானவன்செய்ததொழிலே. (௪௫)

அறிகின்றபொருளென்றுமறிவானில்வேறே
யானலிவ்வூனுகநானென்னலாமோ
செறிகின்றபுள்ளல்லவேகூடிவ்வகையே
செடமானவுடனின்னில்வேறென்றுதெளியே. (௪௬)

நிலமாகும்வற்பென்றனெகிழ்கின்றநீரா
நெருப்பாமிதிற்சுட்டவெல்லாமுமனிலஞ்
சலமானபுரையானவானிந்தவுடலஞ்
சடமானவைம்பூதவுருவங்கடாமே. (௪௭)

விழியைப்புமானென்னில்ரவியாதியாலே
விளங்கின்றதல்லால்விளங்காமையாலே
யொழியப்படுங்கன்னமுதனலுமுன்ற
னுருக்கண்டகண்டன்னையொப்பாகவுன்னே. (௪௮)

வேறு.

அழலுண்பொருள்களினுண்பவைமுக்கூறதின்முதற்கூ
றணியென்புநடுக்கூறதுமச்சைக்கணியாகு



மெழில்கொண்டகடைக்கூறதுவாக்காயெழுமென்றே
யியனூன்மறையந்தங்களிசைக்கின்றனதாமே. (௪௯)

உண்ணும்புனன்முக்கூறதின்முதற்கூறுவர்நீரா
முதிரநடுவிற்கூறுகடைக்கூறுபிராண
னெண்ணும்மிதிலிருகூறவைநீயாயிடினன்றே
விறுகின்றபிராணன்னதுநீயாகுவையிசையே. (௫௦)

வேறு.

பிராணனுமல்லதுஞ்சிலுணர்வின்மையாலஃ
துணரும்புலன்களொழிவாற்
பிராணனதென்னின்மன்னையொழியாதுசேனை
நகர்சூழ்வலஞ்செய்பொழுதே. (௫௧)

கரணமொடுங்கவாயுநிகழ்வென்கொலென்னி
னுடல்காவலாகுமலதேன்
மரணமடைந்ததென்றுதமர்சுட்டிடாமுன்
வளைவாலின்ஞாளிகொளுமே. (௫௨)

இனமுறவெண்ணவுள்ளகரணத்திலொன்றி
தெனலாவிதென்னதெனலான்
மனமுனமன்னமென்றவதனுலுமல்ல
மதியல்லவந்தவகையே. (௫௩)

வேறு.

இடரின்புளதாய்நிலையற்றறிவற்
றெண்ணுங்கரணங்களிலாயெவரு
மடரும்பிறவிக்கடியென்றுணரு
மகங்காரமுநீயலவென்றறியே. (௫௪)

ஐயப்படலோர்பொருணிச்சயமா
யறியப்படல்யானெனதென்றுமதஞ்
செய்யப்படல்செய்வதுசிந்தனையாஞ்
சித்தம்மதுவன்றெனநீதெளியே. (ருரு)

முன்னாகவுடம்பதுசித்தமதே
முடிவாகமொழிந்தபொருட்டிரடா
னின்னாகிலநீயறியும்பொருளாய்
நிகழ்கின்றதனாலெனநின்மலனே. (ருசு)

உன்னாலறியப்படும்யாவையுமுன்
னுருவன்றெனவோதினையொக்குமெனக்
கென்னாலறியாதொழியும்பொருளோ
யானாகுவதென்றனனென்றலுமே. (ருஎ)

அறியாப்பொருள்காரணமாயைகுறித்
தறியும்பொருள்காரியமாமுலகிந்
நெறியாற்றிகழ்நான்மறையந்தமெலா
நீயன்றெனவோதுநிரந்தரமே. (ருஅ)

அறியும்பொருளன்றறியாப்பொருளன்
றறிவாகியநீயெனுமப்பொருடான்
பொறியின்வழிநின்றறியும்பொருளோ
போதக்கண்விழித்தறியும்பொருளே. (ருகூ)

வேதப்பொருடானிதுவேறுசொலும்
வினையாவையுமன்றொருவேறுமிலாப்
போதப்பொருளந்தமறைக்கணியாம்
புனிதப்பொருடத்வமசிப்பொருளே. (சூ0)



## வேறு.

நிமலமாம்பரமதுவெனும்பொரு
ணீயெனும்பொருள்சீவனே
யமலமானவிரண்டையிக்கிய (சூக)
மசிபதப்பொருளாவதே.

அருமையாகியபிரமமுன்னிலை
யாகுமாருயிர்பின்னிலை
யிருமையானவிரண்டையிக்கிய (சூஉ)
மெய்துமாறெவனென்னவே.

உபாதியால்வருபேதமேயிவர்
பேதமன்றுருவுயிரினின்
கபாதியாமுடல்போலிறைக்குள (சூங)
காரணாதிகன்காயமே.

ஈசன்முற்றறிவான்வியாபி
யெவைக்குமேதுவியம்புமா
காசகன்னிருபாதிபாவனை (சூச)
காரணாதிகளாவதே.

நீதியாலிருபாதிநீக்கிட
நீயெனச்சொல்பதத்தினு
மாதியாகியதற்பதத்து (சூரு)
மசுத்தசுத்தமுரைத்துமே.

ஆகமுன்றிகழேழுநானென
வாம்பதத்திலசுத்தமே
சோகமின்றியசான்றுநானென (சூசூ)
வாம்பதப்பொருள்சுத்தமே.

அகிலகாரணமாதிநானென
றற்பதத்திலசுத்தமே
சகலகாரணசான்றுநானென
றற்பதப்பொருள்சுத்தமே. (சுஎ)

செறிந்தகாரணகாரியங்கள்
சிதைந்துமேலுறுசித்ததா
யறிந்தவாதனைதானுமற்றதவ்
வசிபதப்பொருளாவதே. (சுஅ)

அசுத்தமாகியதிருபதத்தினு
முக்கியப்பொருளாகுமே
விசுத்தமானதிலக்கியப்பொரு
ளென்றுசொல்லுவர்விமலரே. (சுகூ)

முரண்டசீவபரங்கடம்முடன்
முக்கியப்பொருளாவதே
யிரண்டில்வேறறுசிற்சொரூப
மிலக்கியப்பொருளாவதே. (எ0)

ஊக்கியப்பரசீவர்தங்க
ளுடம்பிரண்டுமிலக்கணு
வாக்கியப்படிநீக்கினாலொரு
வத்துவேபரவத்துவே. (எக)

ஓரில்விட்டதும்விட்டிடாதது
முபயமும்மெனவுணர்வுளோர்
தேரிலக்கணைதிரிவிதத்தி
லிசைப்பர்மற்றதியம்புவாம். (எஉ)



மஞ்சுகூப்பிடுதென்றல்போலவும்
வடபகிரதியுள்ளதே
விஞ்சுகோஷமதென்றல்போலவும்
விட்டலக்கணையாவதே. (எங)

சிவலைநின்றதுவெள்ளைபோயின
தென்றுசெப்புதல்போலவே
கவலையின்றிவிடாதலக்கணை
யென்றுநீகொள்கருத்திலே. (எச)

மேவும்விட்டுவிடாதலக்கணை
மெய்ம்மையாதெனினந்தவித்
தேவதத்தனெனும்பொருட்படி
சிந்தைசெய்திடுதீரவே. (எரு)

விட்டலக்கணைதனையும்விட்டு
விடாதலக்கணைதனையுநீ
விட்டுவிட்டுவிடாதலக்கணை
யால்விளங்குவிளங்கவே. (எசு)

போதுமேவியதேசம்விட்டொரு
புருடனைக்கொளுமாறுபோ
லோதுமீருடல்கண்டுவிட்டத
னுண்மைகாணவுணர்ந்திடே. (எஎ)

வேறு.

பிரியாவுயிர்காரியமாமுடலும்
பிரமத்துறுகாரணமாமுடலுங்
கரியாகியவாதனையுங்கழியக்
காட்டும்படிகண்டுகொள்கண்ணுறவே. (எஅ)

கரணத்திரணிற்பினுமப்பொருளைக்
காணக்கிடையாதவைகையறவே
மரணப்படினும்மதுகண்டுகொளும்
வழியில்லையெனும்படிநீமதியே. (௭௯)

எந்தக்கரணங்களுமேவனனு
விதில்வாதனையால்விடயங்களொடே
யந்தக்கரணங்கள்பொருந்தல்கனு
வவைமாய்தல்சுழுத்தியவத்தையதே. (௮௦)

வேறு.

வினவிற்பரத்தையறிவுறுதற்
கவத்தைபுலன்வினைமாறியே
நனவிற்சுழுத்திநிலைவரினப்
பொருட்டிகழுநலமாகவே. (௮௧)

திவிதத்தவத்தைகளையறிவுற்ற
வத்துரியநிலைசீவனே
யிவிதத்திலப்புருடனனவுற்ற
வத்துரியநிலையீசனே. (௮௨)

அகிலக்கரிப்பரமதுரியப்பொருட்
டுரியமதுவாகையே
புகலுற்றதத்வமசியெனுமுப்
பதத்தின்முடிபொருளாவதே. (௮௩)

நிமலப்பொருட்சுருதிநெறியிற்பெறக்
கருணைநிதிகூறவே
யமலப்பொருட்பெறுதலருமைத்தெனக்
கழறியடிவீழவே. (௮௪)



தமரக்கலைக்களவுதெரிவற்றதற்பொருள
தனையீகுவா
னமரர்க்களப்பரியபதநற்புனற்கொடுசெய்
தபிடேகமே. (௮௫)

பவளத்தில்வைத்தவமிர்தினின்மிச்சிலிட்டினிய
பரிவோடுமா
தவளப்பொடிக்கவசமென்விட்டுடற்பகை
கடலைசாயவே. (௮௬)

உதகத்துடற்பொருளொடுயிர்கைக்கொடுச்சிமிசை
யொருபோதொடே
பதகத்தலத்தைவிடவிருகைத்தலத்தொ
டிருபதமேவியே. (௮௭)

ஒழியப்புலக்கணுபநிடதப்பொருட்டெரிய
வுளஞானமாம்
விழியைக்கொடுத்துமொழியெனமுப்பதப்பொருளும்
வெளியாகவே. (௮௮)

நனவைத்துவக்கிமுடிதுரியத்தைமுற்றவிறை
நவினீதியே
மனவர்க்கமற்றவநுபவமுற்றசிற்கன
வலியோதுமே. (௮௯)

## வேறு.

புரணமாகவேபுறம்புளபுலன்களுமந்தக்
கரணமியாவையும்வழங்கிடம்நனவெனக்கண்டேன். (௯0)

புரணமாகியபுறம்புளபுலன்கெடவந்தக்
கரணமியாவையும்வழங்கிடங்கனவெனக்கண்டேன். (௯௧)

மரணமாகியதிசையிதுவெனும்படிமனுதி
கரணமியாவையுமிறந்துளசுழுத்தியுங்கண்டேன், (௯௨)

எஞ்சலின்றியெக்கரணமுமிறந்திருண்டிருந்த
துஞ்சலங்குணர்போதமாந்துரியமுங்கண்டேன். (௯௩)

துரியமாகியபோதமோர்துளக்கமற்றனைத்தின்
கரியதாயிருந்திடம்பரனனவெனக்கண்டேன். (௯௪)

புணர்ந்தவிச்சகத்தொழித்துணர்போதமாந்தனையே
வுணர்ந்தமற்றதுபரன்கனவெனும்படியுணர்ந்தேன். (௯௫)

சான்றுசாக்கியமிறந்திடத்தானிருந்தமையுந்
தோன்றுருவிடம்பரன்சுழுத்தியதெனத்துணிந்தேன், (௯௬)

மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்மரித்திடந்தனிலே
தெரித்தபோதமேதுபரன்றுரியமாய்த்தெளிந்தேன். (௯௭)

இறையெனும்பொருட்டுரியமேயென்னையாண்டவனே
மறையினந்தநற்பதப்பொருணனவெனமதித்தேன். (௯௮)



பண்டைவிச்சுவவாதனைப்பழுதுபோய்முழுதுங்
கண்டகண்ணதேயாகியகனவதுங்கண்டேன். (௯௯)

காட்சியாவையுங்கண்ணதாயக்கணுங்கரைந்த
மாட்சியாகியவகோசரமுறக்கமாய்மதித்தேன். (௧00)

அருந்தவாமறையந்தமாமகோசரந்தனினீ
யிருந்தவாறறிவித்தவாறெங்ஙனமிசைப்பேன். (௧0௧)

எம்பிரானிடந்தொறுமிடந்தொறுமதுவதுவாய்த்
தம்பிரானடஞ்செயும்வகைசாற்றுமாறறியேன். (௧0௨)

ஆவியேயடியேன்செய்கைம்மாறுனக்கென்னெனிற்
பாவியேனதுதானுமுன்னுடையதாம்பண்டே. (௧0௩)

ஆவல்செய்தெனதாக்கையுள்ளளவுநின்னடியார்க்
கேவல்செய்வதேயன்றிமற்றொன்றுநானறியேன். (௧0௪)

இறவிலெப்பதமும்பெறவேண்டிலேனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்பணிசெயப்பெறினே. (௧0௫)

## வேறு.

என்றுபலகால்விழுமெழுந்தொழும்ழும்புரியு
மென்னையினியா
னின்றுபலவாகவுரைசெய்தவவனன்பினொடு
நெஞ்சுருகியே. (௧0௬)

ஏட்டிலறிவின்றியிறைதன்னிலறிவின்றியிவ்
வுடம்பினுடனே
வீட்டிலுறைவானையினிவீடுபெறுமென்பது
விளம்புகிலமே. (க0எ)

வஞ்சவலியானரகில்வீழ்ந்திரரங்நரகு
பாழ்படமிகா
விஞ்சைவலியாலடையவேறினர்சுராதிபர்கண்
மேலுலகமே. (க0அ)

தேவருமனித்தருமிவன்றெழில்வியந்துரை
செயப்படுவதோ
மூவரும்வணங்கிமுடியாலவனதேவல்செய
முந்துறுவரே. (க0கூ)

ஞானியைநரன்சுரனெனுதொழிகளுலமுய
நாதனருளான்
மேனியதுகொண்டுதனைநல்கவருமென்றறையும்
வேதமுடிவே. (கக0)

சசிவன்னபோதம்
முற்றிற்று.



உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

விருத்தாசலபுராணத்திலுள்ள

# சசிவன்னன்சரித்திரம்.

நாரணன்றன்னைநோக்கி நம்பர்தாமருளிச்செய்வார்
சீரணிதவத்தினோர்கள் சேவையின்பெருமைகேளீ
ரேரணிபாவவெச்ச னென்றொருமறையோன்மைந்தன்
றூரணிதன்னிற்பாவி சசிவன்னனென்பான்மன்னோ. (க)

பத்தரையும்மையெம்மைப் பரவுவேதத்தைநீற்றை
மெய்த்தருமத்தைநிந்தை விளம்புவதவன்றன்கல்வி
நித்தலுங்களவுசெய்த னியமந்தன்னடுத்தார்தம்மைக்
குத்திரஞ்செய்தருனே குலாசாரமாவதம்மா. (உ)

மாதரைக்கிளைஞர்தம்மை வாலரைக்கருவைக்கோவை
வேதியர்தம்மைக்கொல்லும் விரதமேவிரதால்ல
நீதிகளுடையோர்வீட்டி னெருப்பிட்டும்விடங்களிட்டும்
பாதகப்பொடிகவேிப் பறிப்பதேயவன்றன்கேள்வி. (ங)

பத்திரமெழுதியேவற் பணியினர்போலச்சென்று
குத்திரஞ்செய்துகோளுங் குறளையுமுரைத்துமுன்னை
மித்திரர்போலப்பேசி விருந்துண்டுகளவுகொண்டு
சத்துருவாகப்பேசித் தனிப்பழிதீராநின்றான். (௪)

நிறைத்தபொய்யோலைகாட்டி நிலங்களுந்தனமுங்கொண்டு
மறைத்தவவேடங்கொண்டு வழிக்கரைவந்தியிட்டுப்
பறைச்சியைமனைவியாக்கிப் பாதகரிணக்கஞ்செய்து
மிறைச்சியுமீனுங்கள்ளு மீயலுமருந்தாநின்றான். (௫)

சுரர்களாயிவன்றன்வர்க்கஞ் சுவர்க்கத்தையடைந்தோரெல்லா
தரமிலாநரகில்வீழ்ந்தார் சசிவன்னன்செய்தபாவ [ந்
முரண்முயலகனும்பேயு நோயுமாய்மொய்த்துவீழ்ந்தா
னரகமும்வருவனென்று நடுங்கிடத்தொடங்கிற்றம்மா. (௬)

வெறுத்திடவொருவன்செய்த பாவங்கண்மிக்கதான்று
பொறுக்குமோதெய்வமிம்மை தன்னிலேபுடைத்துப்பின்னர்
மறுத்திடாநரகில்வாட்டும் புண்ணியமலிந்ததான்று
நிறுத்துமோவிம்மைகாட்டு நெருப்புநீர்மிகுதிபோல. (௭)

சசிவன்னன்றந்தையாருந் தரையிடைப்பணிந்துபோற்றி
யிசைவுளதேவபத்த ரென்னுமாதவரைநோக்கி
விசையுளமைந்தன்செய்த வினையெலாம்விளங்கச்சொன்னார்
கசிவுளதேவபத்தர் கருணையாலுபதேசிப்பார். (௮



அழுங்கியபாவவெச்ச வருண்முதுகுன்றன்முத்தி
வழங்குவான்வைத்தநந்தி வரையுநாற்காதவெல்லை
செழுந்திருமலையாள்பூசை செய்தசத்தீச்சுரத்துக்
கொழுந்துபட்டயனார்பூசை கொடுத்தபின்சிருட்டிபெற்றார். ()

பூருவமகவான்பூசை புரிந்துவானரசனானா
னேருறுமிந்திராணி பூசையாலவனைச்சேர்ந்தாள்
தாருகாசுரன்பூசித்துத் தானவர்க்கரசனானா
னுருறுவெள்ளிபூசித் தவர்புரோகிதருமானார். (௧௦)

உருவசிபூசையாலே யுயர்மகவானைச்சேர்ந்தா
ணிருமலநந்திவெற்பி னீயுநின்மகனும்போகித்
தருமதானங்கள்செய்து சத்திநாதனையும்போற்றிப்
பருவரைதனின்மானந்தி பராயணரிருப்பார்காண்மோ. (௧௧)

அந்தமாயோகிதன்னை யானுதசேவைபண்ணின்
மைந்தனேயகலுமென்றார் மறைமுனிவாக்கைநம்பி
யிந்தமால்வரையினண்ணி யீசானகங்கையாடித்
தந்தையுமகனுஞ்சத்தித் தலைவனைப்பணிந்துபோற்றி. (௧௨)

பரமதேசிகராநந்தி பராயணர் தம்மைப்போற்றி
யுரமுறப்பணிந்துசேவை யுற்றபின்மைந்தன்செய்த
கரவுடைப்பவங்கள்சொன்னான் கடைக்கணால்யோகிநோக்க
விரவுபாதகங்களெல்லா மேவிடாதகன்றதன்றே. (௧௩)

யோகிதன்பூசைக்கேற்ற வுபகரணங்கள்செய்தும்
போகமார்பசுக்கண்மேய்த்தும் பொற்பதம்பிடித்துநிற்ப
வேகியபவங்கணீங்கி வியாதியுநோயும்பேயு
மேகியதுடனேபின்னர்ப் பரிகலச்சேடமீந்தார். (கச)

பரிகலச்சேடங்கொண்டு பதத்தினிற்பூசைசெய்தா
னரியஸ்ரீயோகிசார்த்தி யடியிணைதலைமேல்வைத்துத்
தெரிவுறவுபதேசித்தார் திவ்வியஞானம்பெற்றுத்
தரிவுளமுத்திபெற்றான் றந்தையுமுத்திபெற்றான். (கரு)

பிதிர்க்களுநரகம்விட்டுப் பெருஞ்சிவலோகஞ் சேர்ந்தார்
கதிர்ச்சசிவன்னர்காதற் புலைச்சியுங்கதியிற்சேர்ந்தாள்
மதித்திருமாலேகேளீர் மாதவர்பெருமைதன்னைத்
துதிக்கரிதின்னஞ்சொல்வோஞ் சுவகையென்றுருத்திவேசி.

சசிவன்னன்சரித்திரம்

முற்றிற்று.




